10/11/47.

தந்தி: "Truth" ஜெய் ஹிந்த் போன்: 15

அடிமை இருள் நீங்கி சுதந்
திர சூரியன் உதித்த இவ்
வருட சுதந்திர தீபா
வளிக்கு மதுவரக்களை
ஒழித்து மகிழ்ச்சியுடன்
கொண்டாடும் மக்களுக்
கும் ஏனைய தமிழர்
அனைவருக்கும்

# எமது தீபாவளி
# வாழ்த்துக்கள் உரித்தாகுக.



# S. முத்துசாமி செட்டியார்
# அன் சன்ஸ்,

பவுன் நகை வெள்ளிப்பாத்திர வியாபாரம்;

**125 A,** தெற்காவணிமூல வீதி,

**மதுரை.**

# எமது தீபாவளி வாழ்த்துக்கள்!





## அங்கு விலாஸ்

**வாசனைப் புகையிலை.**

ரிஜிஸ்டர் நெ. 12700.

**திண்டுக்கல்.**



பொதுஜனங்கள் எப்பொழுதும் எங்கள் சோல் ஏஜெண்டுகளிடம் **அங்கு விலாஸ்** புதிய வாசனைப் புகையிலையாக வாங்கி உபயோகியுங்கள். ருசியும், வாசனையும் உள்ளது.

**2 அணு பாக்கெட்**

**சோல் ஏஜெண்டுகளிடம்:**

பாக்கெட் 1-க்கு ரூ. 0-1-9.

லூஸ் பவுண்டு 1-க்கு ரூ. 1-8-0.

# தீபாவளி சபதம்

இன்று தீபாவளி. புனிததினம். இமயம் முதல் குமரி வரை எண்ணற்ற கோடி மக்கள் இந்த மங்கள தினத்தை மட்டற்ற மன எக்களிப்போடு கொண்டாடுகிறார்கள். எதற்காக?

உலகைப் பாழ்படுத்தி வந்த நரகாசுரன் போன்ற அரக்கர்கள் மடிந்து மண்ணாகிப் போய்விட்டனர் என்பதற்காக.

ஆனால் உண்மையில் பழைய நரகாசுரர்கள் மாண்டு மடிந்துவிட்டார்கள் என்றாலும், புதிய பகாசுரர்கள் பலர் இன்னும் இந்த நாட்டை ஆட்டி அசைத்து அல்லோல கல்லோலப் படுத்தி வருகிறார்கள். இவர்கள் வேறுயாருமில்லை.

பிறந்த பொன்னாட்டின் விலைமதிப்பற்ற சுதந்திரத்தை அபகரிக்க திட்டமிடும் மதவெறியர்கள் இவர்கள்.

கஞ்சிக்கு உப்பில்லையே என்று ஒரு பெரிய ஏழைக் கூட்டம் கதறும் போது பாலுக்கு சர்க்கரையில்லையே என்று கூப்பாடு போடும் படுபாதக நாசகார சண்டாள கூட்டத்தார் இவர்கள்.

இந்த சமுதாய விரோதிகள், கயவல அரக்கர்கள் என்று அழிந்து படுகிறார்களோ, என்று ஜாதி. சமயமற்ற, உயர்வு தாழ்வு தொலைந்தொழிந்த சமதர்ம சமுதாய அமைப்பு ஏற்படுகிறதோ என்று ஒருவர் பாக்கியின்றி இந்திய ஜாதி முழுவதுமே புது உணவு உண்டு புத்தாடை உடுத்தி, புன்னகை மலர் முகம் காட்டுகிறார்களோ அன்று தான் உண்மை தீபாவளி.

அந்தப் புத்தொளி சுடர்விடும் புனித தினம் அண்மையில் ஏற்பட, இந்திய இனம் இன்று இதயதாபத்தோடு, உருக்கு உறுதியோடு வீர சபதம் எடுத்துக்கொள்ளட்டும். 'ஜெய் ஹிந்த்'



# எது தீபாவளி?

வீரஇளங்கோ

பட்டாடை மேலங்கி போட்ட செல்வர்
பசியின்றித் திரிகின்ற காட்சி யங்கே!
பட்டினியுங் கட்டஉடை தானு மற்று
பாட்டாளி பாதவிக்கும் காட்சி யிங்கே





வென்னீரில் எண்ணெய்யிலே மேல் குளித்து
விருப்பான பண்டங்களை வீணர் தின்பார்
கண்ணீரில் தன்னுடலைக் கழுவும் ஏழை
கைவிரலைச் சுவைத்துண்ணக் கருது கின்றார்





பட்டாசு வெடிசுட்ட பா பாப்பில்
பணக்காரச் சிறு வரெல்லாம் சிரிப்பாரங்கே
பட்டாசு கேட்டவுடன், உதை முதுகில்
பட்டதனால் தேம்பி யழும் பால ரிங்கே



வாழ் வெல்லாம் படுந்துன்பம் போது மானால்
வயிறாக் கஞ்சி யேனும் கிடைக் குமானால்
பாழ்பட்ட ஏழையுள்ளம் மலரு மானால்
பண்டிகையும் உண்மையிலே அன்று தானே





எல்லோரும் உண்டு டுத்த வாழ்வும் பெற்று
இன்ப முறு சமதர்ம அரசும் நாட்டி
எல்லோரும் இன்னாட்டு மன்ன ரானால்
இதுவேதீ பாவளிநாள் விழாவா தும்மே



நாகாசூரன் அழிந்தான்: ஏகாதிபத்திய வெறியன் ஒழிந்தான்: மதுவரக்கன் மாண்டான்



முதலாளித்வ அரக்கன் அழிவது எப்போ?

# ஹைதராபாத் மீது

நீதிக்கும், நேர்மைக்கும் கொஞ்சமும் அடிபணியாமல், எதிலும் அக்கிரம முறையிலே திடும் பிரவேசமாக காரியங்களைச் செய்தால்தான், வெற்றி முகம் காண முடியும் என்பது கொடுங்கோலன் செங்கிஸ்கானின் சித்தாந்தம்.

பழிக்கோ பாவத்திற்கோ கிஞ்சிற்றும் அஞ்சாமல் எதையும் துணிந்து செய்ய வேண்டும் என்பது முரட்டுத் தைமூரின் கோட்பாடு.

உண்மையில் சொந்த பலம் உண்டோ இல்லையோ, அதைக்குறித்து கவலைப் படாமல், வெறும் உருட்டல் மிரட்டல்களாலேயே முடிந்தவரை காரியத்தைச் சாதிக்க வேண்டும் என்பது 'பாசிஸ்ட் ஜடாமுனி' முசோலினியின் பாடம்.

கற்பனைக்குக்கூட எட்ட முடியாத அண்டப் புளுகுகளை அள்ளிவீசி, ஆக்ரமிப்பு கைங்கரியத்தை அனுயாசமாக செய்துமுடிக்கவேண்டும் என்பது யுத்த வெறியன் ஹிட்லரின் வழி.

சரித்திர ஏடுகளிலே நீங்காத களங்கம் உண்டுபண்ணிவிட்ட இந்தக் கயவர்களின் அடிச் சுவடுகளை காஷ்மீரிலும், ஹைதராபாத்திலும் அங்குலம் அங்குலமாகப் பின்பற்ற இப்போது ஆரம்பித்திருக்கிறார் லீகின் ஏக சக்ராதிபதி ஜின்னா சாகிபு.

காஷ்மீர், முஸ்லிம் மெஜாரிட்டி சமஸ்தானம். அங்கு 80 சதவீத முஸ்லிம்கள் வாழ்கிறார்கள். ஆனால் இந்த முஸ்லிம் சமஸ்தானத்திற்கு ஒரு ஹிந்துதான் ராஜாவாக இருக்கிறார். இந்த சமஸ்தானம் இந்திய யூனியனில் சேருவதா அல்லது பாகிஸ்தானில் சேருவதா என்பது கொஞ்சகாலமாகவே ஒரு பெரிய பிரச்னையாக இருந்துவந்தது.

இந்தப் பிரச்னையில் இந்திய சர்க்கார் காட்டிய நேர்மையை இங்கு அவசியம் குறிப்பிடவேண்டும். "காஷ்மீர் எந்த அரசியல் நிர்ணயசபையில் சேருவது, என்பது அந்த சமஸ்தான மக்களின் சொந்த விஷயம். அவர்கள் என்ன முடிவு கூறுகிறார்களோ, அதை அப்படியே மறுப்பின்றி ஏற்க இந்திய யூனியன் தயாராக இருக்கிறது" என்று கொஞ்சமும் சந்தேகத்திற்கிடமின்றி இந்நாட்டின் திறமைமிக்க பிரதமர் நேருஜி ரொம்ப ஸ்பஷ்டமாகத் தெரிவித்துவிட்டார்.

யதார்த்தமாக பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் ஜின்னா சாகிபும் இதேபோன்ற ஒரு நியாயமான மார்க்கத்தைத்தான் பின்பற்றியிருக்கவேண்டும். அல்லது இரு டொமினியன்களும் கலந்துகொண்டு, பாரபட்சமற்ற ஒரு சர்வதேச நீதிசபையின் கண்டிப்பான கண்காணிப்பின் கீழ் அங்கு சர்வஜன 'வோட்' எடுத்து காஷ்மீர் சமஸ்தானம் எந்த அரசியல் நிர்ணய சபையில் சேருவது என்பதை முடிவு செய்திருக்கவேண்டும். இதுதான் நியாயம்.

இந்தக் கண்ணியமான காரியத்தை செய்வதைவிட்டு, லீக் சர்வாதிகாரி ஜின்னா பலாத்காரத்தை உபயோகித்து காஷ்மீரை பணியவைத்துவிடலாம் என்று திட்டமிட்டால், அதைப்பார்த்துக்கொண்டு அந்த சமஸ்தானம் சும்மா இருக்கமுடியுமா? தனது பாதுகாப்புக்காகவாவது இந்திய யூனியனில் சேர்ந்து அதன் உதவியை நாடவேண்டுமல்லவா? அதைத்

# படையெடுப்போம்

தான் அந்த சமஸ்தானம் இப்போது செய்திருக்கிறது.

**இதில் என்ன தவறு இருக்கிறது?** ஜின்னு சாகிபு ! ஏன் ரௌத்திராகாரமடைந்து இந்தியாவின் சுவிட்ஜர்லந்து என்று வர்ணிக்கப்படும் அழகிய காஷ்மீரை அழித்து ஒழிக்க அடங்காப்பிடாரிகளான காலி குண்டர்களை அனுப்பவேண்டும்? இதைகேட்டால், 'லீக் ஹிட்லர்' மழுப்புகிருர். "நாங்கள் எங்கே படைகளை அனுப்பினேம்? யாரோ மலைஜாதியினர் காஷ்மீருக்குள் புகுந்தால் நாங்கள் என்ன பொறுப்பா?" என்று கேட்டு விதண்டாவாதம் பேசுகிருர்.

இந்த அசட்டுக் குருட்டு வாதத்தை நியாயமென்று ஒப்புக் கொள்ள முடியுமா? மலை ஜாதியினர் காஷ்மீருக்குள் படையெடுத்து வந்தார்கள் என்ருல், எந்த மார்க்கமாக வந்தார்கள்? பாகிஸ்தான் வழியாகத்தானே வந்தார்கள்? இது பாகிஸ்தான் சர்க்காருக்குத் தெரியுமா? அப்படித் தெரியுமானுல், ஜின்னு சாகிபு இதை ஏன் தடுக்கவில்லை? இன்று சாதாரணமான மலை ஜாதியினரை தடுத்து நிறுத்தாதவர்கள், நாளை இந்தியா மீது அன்னியர் படையெடுத்து வந்தாலும் இப்படித்தானே செய்வார்கள்?

இது போகட்டும். தங்களுக்கு ஒரு விதத்திலும் சம்பந்தமில்லை என்று லீக் பிடாரிகள் சொல்லும் மலை ஜாதியினர் சாதாரண பிரஜைகளே! அப்படியிருந்தும் அவர்களுக்கு 'டாங்கு'கள், இயந்திரத்துப்பாக்கிகள் போன்ற நவீன ஆயுதங்கள் எப்படிக் கிடைத்தன? பாகிஸ்தான் சர்க்கார் கொடுக்காமல், எங்கோ ஆகாயத்திலிருந்து தொப்பென்று விழுந்து விட்டனவா?

இது தான் இப்படியென்ருல், படையெடுத்து வந்திருக்கும்பேர் வழிகள் ஒன்றும் தெரியாதவர்கள் அல்ல. நன்கு பயிற்சிபெற்ற ராணுவத்தினர் போல அவர்கள் தெரிகிருர்கள் என்று செய்திகள் கூறுகின்றன. அப்படியானுல் இவர்களுக்கு ராணுவப் பயிற்சி அளித்தது யார்? பாகிஸ்தான் சர்க்கார் அல்லாது வேறு எவரும் இவர்களுக்குப் பயிற்சி அளித்து விட்முடியுமா?

இதுவும் போகட்டும். ஜின்னு சாகிபின் மாஜி அருமை காரியதரிசி குர்ஷீத்துக்கு காஷ்மீரில் என்ன வேலை? அதுவும் அவர் தலைமறைவாக இருந்து வந்ததின் அந்தரங்கமென்ன?

இன்னும் லீகோடு தொடர்பு கொண்ட காஷ்மீர் முஸ்லிம் ஸ்தாபனத்தார் கொஞ்சமும் பொதுஜன ஆதரவின்றி, போட்டி

சர்க்கார் அமைத்திருப்பதின் அர்த்த மென்ன?

தவிரவும், காஷ்மீரில் தான் அனுப்பிய குண்டர்கள் புறமுதுகு காட்டிப் பின்வாங்கி அலங்கோலமாக ஓடிவரும் நிலைமையில், ஜின்னு சாகிபு பாகிஸ்தானில் பொதுப்படை திரட்டலுக்குப் பூர்வாங்கமாக, காவல் சேனை அவசரச் சட்டம் பிறப்பிக்க நேர்ந்ததின் அவசியம் என்ன?

இவையெல்லாம் எதைக்காட்டுகின்றன? தங்களுக்கும் காஷ்மீர் மீது அப்ரிதிகள் படையெடுப்புக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்ற நயவஞ்சகப் போர்வையில், காஷ்மீரை கத்தி முனையில் பணியவைத்துவிடலாம் என்ற ஜின்னுசாகிபின் சூழ்ச்சி எண்ணத்தையல்லவா? நல்ல வேளையாக, பாகிஸ்தான் சகுனிகளின் இந்த மாய்மால தந்திரங்களை புரிந்துகொண்டு இந்திய சர்க்கார் காஷ்மீருக்குத் தனது படைகளை அனுப்பி, எதிரிகளை துவம்சம் செய்ய முனைந்திருப்பதைப் பாராட்டுகிறேம். இத்தோடு நாம் நின்றுவிடக்கூடாது. இனியும் காஷ்மீரைக் காப்பாற்றுவதில், இந்தியாவே அழிய நேரிட்டாலும் பரவாயில்லை. எப்படியும் நயவஞ்சக துரோகிகளின் இரும்புப் பிடியிலிருந்து நாட்டைக் காப்பாற்ற யுவ சிங்கங்கள் பல லட்சம் பேர் இரத்தாபிஷேகம் செய்யத்தயாராக இருக்கவேண்டும்.

அது மட்டுமா? காஷ்மீரில் தகிடுதத்தம் செய்யும் பாகிஸ்தான் வெறியர்கள் ஹைதராபாத்திலும் வாலாட்டப் புறப்பட்டிருக்கிறர்கள். அங்கு 80 சத வீதத்திற்கு அதிகமாக இருக்கும் இந்துக்கள், ஹைதராபாத் இந்திய யூனியனில் சேரவேண்டும் என்று ஏகோபித்த அபிப்பிராயம் தெரிவிக்கும்போது, ஜின்னுவும் அவருடைய சகாக்களும் மட்டும் அதை எப்படியும் தடுத்தே தீருவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு 'பகடி' வேலைகள் செய்வதில் முனைந்திருக்கிறர்கள். வெளியிடங்களிலிருந்து ஏராளமான குண்டர்களை ஹைதராபாத்துக்குள் இறக்குமதி செய்து, ஏக அக்கிரமம் செய்யத் தூண்டிவிட்டிருக்கிறர்கள். அதோடுமட்டும் நில்லாமல், ஹைதராபாத் நிஜாமை வெறும் பொம்மை போல் ஆட்டிவைத்து, இந்திய சர்க்காரோடு சமரசப் பேச்சுவார்த்தைகள் நடத்திய தூதுகோஷ்டியையே ராஜினுமா செய்யும்படி வைத்துவிட்டார்கள். சுருங்கக்கூறினுல், லீகின் ஹைதராபாத் கிளையான இத்திஹாத்-உல்-முஸல்மீன் என்னும் ஸ்தாபனம்தான் இன்று அந்த சமஸ்தானத்தை ஆள்கிறது.

இந்த சூழ்நிலையை வளரவிடுவது இந்திய யூனியனுக்கு பெரும் ஆபத்து. பழிக்கும் பாவத்திற்கும் கொஞ்சமும் அஞ்சாத பாகிஸ்தான் வாலாக்கள் ஹைதராபாத்தை ஒரு கேந்திர படையெடுப்புத்தளமாகப் பயன்படுத்திக்கொள்ளத் தவறமாட்டார்கள் என்பது உறுதி. ஆகவே, இந்தப்பிரச்னைக்கு இப்போதே ஒரு முடிவு கட்டியாகவேண்டும்.

ஒன்று, ஹைதராபாத்தில் சர்வஜன வோட் எடுத்து, அதன் முடிவுப் பிரகாரம் அந்த சமஸ்தானம் எந்த அரசியல் நிர்ணய சபையில் சேருவதானுலும் அதை பாகிஸ்தான் சர்க்கார் அனுமதிக்கவேண்டும். இந்த நியாயமான உடன்பாடுக்குக் கட்டுப்படாமல், மேலும் மேலும் பாகிஸ்தான் பெருச்சாளிகள் அங்கே இருந்துகொண்டு குழிபறிக்க முனைவார்களேயானுல், இளம் இரத்தம் துடிதுடிக்க இறுதிக் கட்டளைக்காக காத்துக்கொண்டிருக்கும் எண்ணற்ற இளைஞர்கள் உத்தியோகப்பூர்வமற்ற முறையில் ஹைதராபாத் மீது படையெடுத்துச் சென்று, நிஜாமை ஜுனுகத் நவாப் போன்ற பாகிஸ்தான் பாதுஷாவின் அரண்மனைக்கே 'பார்சல்' செய்துவிடுவோர்கள் என்பதை எச்சரிக்க விரும்புகிறேம்.

---

**'சுவர்க்க பூமி' (தொடர்கதை) அடுத்த வாரம் வழக்கம்போல தொடர்ந்து வெளிவரும்.**

---

# நக்கீரர் பேசுகிறார்



சட்ட சபை மெம்பர்கள்மேல் நமது நம்பிக்கையை யெல்லாம் வைத்து அவர்களை நமது பிரதிநிதிகளாக சட்ட சபைக்கு அனுப்பி வைத்தோம். உடை, உணவு, வீடு இவற்றிற்கு உயிரைக்கொடுத்து போராடிக் கொண்டிருக்கும் லட்சக்கணக்கான ஏழை மக்களுக்கு இந்த நாட்டிலே நல் வாழ்வை அளிக்கக்கூடிய வழி முறைகளை அவர்கள் வகுப்பார்கள் என்று எதிர்பார்த்தோம். மலைபோல் குவிந்திருக்கும் கணக்கற்ற பிரச்னைகளைக் கவனிக்க, சட்ட சபையின் ஒவ்வொரு நிமிஷத்தையும் ஒவ்வொரு ஜீவத் துடிப்பாய் கருதி உபயோகிப்பார்கள் என்று நம்பினோம்.

ஆனால் சமீபத்திய சட்ட சபை விவாதத்திலே "தூங்கும் விஷயமாக" பிரமாதமான வாதப் பிரதி வாதங்கள் நடந்திருப்பதைப் பார்க்கும்போது நமது அந்த நம்பிக்கையில் இடி விழுகிறது. "சட்ட சபையில் ஒரு அங்கத்தினர் தூங்கலாமா?" என்ற அவசியமில்லாத, காலத்தை வீணாக்கக்கூடிய ஒரு கேள்வியைக் கேட்டதும், சபா நாயகர் விழுந்தடித்துக்கொண்டு மேனாட்டு சட்டப் புஸ்தகத்தைப் புரட்டி, அதில் 'தூங்கும் பிரச்னை' எங்கே தூங்கிக்கொண்டிருக்கிறது என்று ஒவ்வொரு பக்கமாய் துருவி துருவிப் பார்த்தார். முடிவில் "அப்பன் குதிருக்குள் இல்லை" என்ற தோரணையில் அங்கத்தினர் தூங்கலாம். ஆனால் குறட்டை விடக்கூடாது! என்ற அபூர்வ உண்மையைக் கண்டுபிடித்து வெளியிட்டார். மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்களோ அவரையும் ஒருபடி மிஞ்சிவிட்டார். "இது உஷ்ணப் பிரதேசம். தூக்கம் வருவது சகஜம்," என்று தமது மேல்நாட்டு அனுபவத்தை அவிழ்த்துவிட்டார்.

நாட்டின் அபிவிருத்தி திட்டங்களைத் துரிதமாகத் தயாரிக்க ஒவ்வொரு நிமிடத்தையும் பொன்னாகக் கருதி செலவழிக்க வேண்டிய இந்த சந்தர்ப்பத்தில் 'தூங்கும் பிரச்னை' என்ன அவ்வளவு முக்கியமா? இதற்காகவா எம். எல். ஏ.க்கள் சட்ட சபைக்குச் செல்கின்றனர்? இதற்காகவா, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நமது எதிர்கால வாழ்வையெல்லாம் இவர்களின் கையிலே ஒப்படைப்பதைப் போல, நமது விலை மதிப்பற்ற 'வாக்கு'களைக் கொடுத்தோம்! பசியாலும், பட்டினியாலும் தவித்துக்கொண்டு அவர்களின் முகத்தையே ஒவ்வொரு விநாடியும் பார்த்துக்கொண்டிருக்கும் கோடிக்கணக்கான மக்களின்நம்பிக்கையைப்பாழாக்காமல், இனியாவது சட்ட சபையினர் நாட்டின் ஜீவாதாரமான, பயனுள்ள பிரச்னைகளில் தமது காலத்தை செலவழிக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறோம்!



கண்ட்ரோல்போடப்பட்டதன் காரணமாக மோசடி, பொய், கள்ளமார்க்கெட் தோன்றுகின்றன. இயற்கையில் பஞ்சமில்லாமல், செயற்கையால் பஞ்சம் ஏற்படுகிறது. கட்டுப்பாடு இருப்பதால் அரசாங்கம் பொருளை சேகரித்துத் தரட்டும் என்று எண்ணி பொது மக்கள் 'தன்கையே தனக்குதவி' என்ற மணிவாசகத்தை மறந்து விட்டனர். அளவுக்கு மீறிய கட்டுப்பாட்டால்ஜனநாயகம்சிதைந்துவிடும்... இந்த வார்த்தைகளை வேறு யாராவது சொன்னால் இந்தியாவிலுள்ள மாகாண மந்திரிகளில் பலருக்கு பிரமாதமான கோபம் வந்துவிடும்; ஆனால் உண்மைக்குத் தாயகமான நாட்டின் நலனில் வேறு எவரையும்விட அதிகம் அக்

கலையுள்ள அண்ணல் காந்தியடிகளே இப்படிக் கூறியிருக்கிருரென்ருல் அதில்நியாயம் நிச்சயமிருக்கும் என்பதில் சந்தேகமேஇல்லை.

கண்ட்ரோல் அதன் தன்மையிலே ரொம்பவும் நல்லதுதான். ஆனுல் எப்பொழுது?

கண்ட்ரோலைப்புகுத்தியிருக்கும்அரசாங்கம் கடுகளவும் அதன் விதிகள் பிறழாமல் தீவிரமான கண்காணிப்பையும் நேர்மையான,கண்டிப்பான நிர்வாகத்தையும், கடுமையான நடவடிக்கையையும் மேற்கொண்டிருக்குமானுல் தான் கண்ட்ரோலால் பொது மக்களுக்கு நன்மை ஏற்பட முடியும்.

ஆனுல் இன்றைய மாகாண அரசாங்கங்களிடமோ இவை யொன்றும் இல்லை என்பது கண்கூடு. கண்ட்ரோல் ஸ்தாபனங்கள் பல இடங்களில் 'லஞ்ச ஸ்தாபனங்களாக' மாறி விட்டன. கொள்ளைலாப வியாபாரிகள் பூமிக் கடியில், பதுக்கல் முறையைக் கடைப் பிடித்து 'கள்ள மார்க்கெட்டை' வளர்க்கின் றனர்.

பிரான்ஸ் போன்ற தேசங்களில் கண்ட்ரோலை எவனுவது மீறினுல் உடனே தூக்குத் தண்டனைதான். அதைப் போல கடுமையான சட்டங்களிருந்தால்தான் கட்டுப்பாட்டால் ஏழை மக்களுக்குப் பலனுண்டு.

நமது தேசத்திலோ என்ருல் அம்மாதிரியான சட்டங்கள் எதுவுமே இல்லை. பணத்தைக் கொடுத்து இங்கே, எவனும் தப்பித்துக் கொள்ளலாம்.

கண்ட்ரோல் விதிகள் சரிவர அமுல் நடத்தப்படாவிடில் அவை நாட்டையே கெடுக்கும் விஷமாக மாறிவிடும். அந்த நிலைமைதான் இன்று இங்கே இருக்கிறது! இதற்கு ஒரே வழி விலை நிர்ணயமுள்ள பகிரங்க வியாபாரத்தை நடத்த அரசாங்கம் அனுமதிப்பதுதான்!

பகிரங்க வியாபாரத்தினுல் எப்படியும் மக்கள் பொருள்களை தற்போதுள்ள அளவிற்கு அதிக கஷ்டமில்லாமல் வாங்க முடியுமென்பதற்கு 'பத்திரிகைத்தாளை' (நியூஸ் பிரிண்ட்டை) ஒரு உதாரணமாகக் கொள்ளலாம். 'பத்திரிகைத்தாள்' கட்டுப்பாடு இருக்கும் போது பணம் படைத்தவர்கள் அதிக 'கோட்டா' பெற்று ஏராளமாக 'பத்திரிகைத்தாளை' வாங்கி, அதை அப்படியே 'கள்ளமார்க் கெட்டில்' விற்று வந்தனர் என்பதை நாம் நன்கறிவோம். தற்போது அந்த கட்டுப்பாடு நீங்கவும் எல்லோருக்கும் 'பத்திரிகைத்தாள்' சிரம மின்றிசுலபமாய்க் கிடைக்கிறது. இதிலிருந்து தெரிவதென்ன? பொருள்கள் நிறைய இருக்கின்றன. ஆனுல் அவைகள் கண்ட்ரோலின் கீழ் வரும்போது, மூடக்கப்பட்டு, கள்ள மார்க்கெட்டில் மாயமாய் புகுந்து விடுகின்றன.

ஆதலால், காந்திஜியின் அறிவுரைப் படியும் நிதரிசனமான நிலைமையின் படியும், பொருள்களின் விலை நிர்ணயத்தை மட்டும் வைத்துக் கொண்டு, மற்ற கட்டுப்பாடுகளை யெல்லாம் எடுத்து விட்டு பகிரங்க வியாபாரத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வர அறிவுறுத்துகிருேம். ★

பார்ப்பதற்கு அழகாக, பள பள வென்று அச்சடித்து, அறிவு நுணுக்கத் தோசேட்டங் களை இயற்றி புத்தகத்தில் அடுக்கடுக்காய் வைத்து விடலாம். இது சுலபம். ஆனுல்நடைமுறையில் அவற்றை அமுலுக்குக் கொண்டு வருவதில் தான் ஒரு சர்க்காரின் திறமையும் தகுதியும் இருக்கிறது. சமீபத்தில் சட்டமாக்கப் பட்ட கடைச் சிப்பந்திகள் சட்டம், சென்னை சர்க்காரின் திறமைக்கு ஒரு உரைகல்.

அன்ருட மக்கள் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்புடைய தொழிலாளி ஒருவர் உண்டென்ருல் அவரே கடைச்சிப்பந்தி. காலை $5\frac{1}{2}$ மணிக்கு கவளம் சாதம் உள்ளே போயும் போகாமலுமிருக்கும் நிலையில் ஓடோடியும் வந்து கடையைத் திறப்பாரானுல், இரவு பதினேரு மணிக்கு அதுவும் முதலாளி ஐயா தயவிருந்தால்,



மனைவி:- என்ன சாப்டதும் புறப்படுரீங்களே, தூங்கலியா!

(எம். எல். ஏ.):- அதெல்லாம் சட்டசபைக்குப் போய் பாத்துக்கிறேன்.

ஒரு வேளை வீட்டை எட்டிப்பார்க்கலாம். இரண்டு நாள் சேர்ந்தாற்போல் வியாதியாய்ப் படுத்து விட்டால் சம்பளம் போய் விடும். வேலை எழுத்தை எப்படி மாற்றவோ, மறுக்கவோ முடியாதென்கிறார்களோ அதைப் போல மாதச் சம்பளம் ரூபாய் பத்து, பதினைந்து என்றே இருக்கும். அதுவும் அந்த மாத முடிவில் கிடைப்பது குதிரைக் கொம்பு தான். வேலை செய்யும் இடமோ நரகலோகம். ஒருவன் எத்தனை வருடம் விசுவாசமாக நாணயமாக உழைத்தாலும், முதலாளி மனம் கோண கடுகளவு நடந்தாலும் உடனே 'டிஸ் மிஸ்' தான். அதற்கு 'அப்பீலே' கிடையாது.

இப்படி யெல்லாம் நெருப்பில் கிடந்து தவிக்கும் புழுக்களை யொத்த கடைச்சிப்பந்திகளின் நிலைமை இனிமேல் ஒரு விநாடியும் சுதந்திர இந்தியாவில் இருப்பது சகிக்க முடியாதது. பிரகாசம் மந்திரிசபை காலத்திலேயே திரு. கிரியின் மூலம் சட்டமாக வேண்டிய இம்மசோதா இவ்வளவு காலம் கழிந்த பிறகாவது சட்டமாகியது சிறிது மகிழ்ச்சிக்குரிய விஷயம்தான். என்றாலும் கடைச் சிப்பந்திகளின் குறைகள் எல்லாம் அதிலே நிவர்த்திக்கப்பட்டு விட்டனவா? என்றால் இல்லை யென்றே சொல்ல வேண்டும்.

முக்கியமான இரண்டு குறைகள் அப்படியே வேண்டுமென்றே விடப்பட்டிருக்கின்றன.

★ வாடிக்கைக்கு அத்தியாவசியப் பொருள்களின் விலை விஷம் போல் ஏறியிருக்கும் இந்தக் காலத்தில், கொள்ளை லாபமடிக்கும் முதலாளிகள் ரூ 5; 10 என்று சம்பளம் கொடுப்பதைத் தடுப்பதற்கான எந்த வழியும் இந்தச் சட்டத்திலே செய்யப்படவில்லை. ஒவ்வொரு விதமான கடைச் சிப்பந்திக்கும் அடிப்படைச் சம்பளம் இவ்வளவு என்று கண்டிப்பான முறையில் நிர்ணயிக்கப்பட வேண்டும். இது அவ்வளவு சிரமமான காரியமல்ல.

★★இரண்டாவதாக கடைச் சிப்பந்திகளின் பிற்கால வாழ்க்கைச் சேமிப்புக்காக, அரசாங்கக் கண்காணிப்பில் 'பிராவிடெண்ட் பண்டு' போன்ற சேமிப்பு நிதி விஷயத்திலும் சர்க்கார் கவனம் செலுத்தவேயில்லை. முதலாளியின் லாபத்தில் ஒரு பகுதியை இதில் சேர்க்கும்படி சட்டமிருந்திருந்தால் அதனால் கடைச் சிப்பந்திகளின் உழைப்புக்கு பிற்காலத்தில் ஒரு உத்திரவாதம் ஏற்பட்டிருக்கும்.

★★★'கடைச் சிப்பந்திகள் சட்டம்'செய்தது பிரமாதமல்ல. அதைக் கண்டிப்பான முறையில் சென்னை சர்க்கார் அமுலுக்குக் கொண்டுவரவேண்டும். பணக்கார முதலாளிகளின் 'ஜேபியில்' இருக்கும் இன்ஸ்பெக்டர் அதிகாரிகளையெல்லாம் ஒழித்து, யோக்கியமான உத்தியோகஸ்தர்களின் மூலம் சட்டத்தை மீறுபவர் யாராயிருப்பினும் அவர்களைக் கடுமையாய் தண்டிக்கும் வகையில் 'மேற் பார்வை ஸ்தாபனம்' நிர்வகிக்கப் பட்டால்தான் இந்த சட்டம் கடைச் சிப்பந்திகளுக்கு ஓரளவு நன்மை செய்ததாக ஆகும்.

---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

கட்டுகளில் ஏறி சிலையிருந்த நடு பாகத்தை அடைந்தான் கண்ணன். தன் சிலை இருந்த இடத்தைப் பார்த்தான்!......?

சிலை அவன் வைத்தபடி இல்லை. கீழே படுக்கையாகக் கிடந்தது. உள்ளே போதிய வெளிச்சமில்லாததால் அவன் மனம் மேலும் கலவரமடைந்தது. ஆவலாகச் சென்று சிலையைத் தூக்கினான்.

கையோடு வந்தது. மிருதுவாகவும், 'வழ வழ'வென்று மிருந்தது. உடலைச் சுற்றிப் புடவை! தலையிலே பட்டுப் போன்ற கேசம். ஒன்றுமே புரியாது உற்றுப் பார்த்தான் கண்ணன். மார்பு முழுதும் ஈரமாக நனைந்திருந்தது. அதன் நடுவிலே ஒரு கத்தி!

"ஆ! சரசா!..." மண்டபம் அதிர பைத்தியம் போல் கதறினான் கண்ணன். மறுவினாடி தன் சிலையின் ஞாபகம் வர சரசாவின் சவத்தை அங்கேயே போட்டு விட்டு, பரபரப்போடு ஓடிப்பார்த்தான். சட்டென்றுவழியில் அவன் காலிலே இடித்தது அந்தச் சிலை.

ஆவலோடு குனிந்து தன் சிலையைத் தூக்கிப் பார்த்தான். அது இரண்டு துண்டுகளாக உடைந்து கிடந்தது!

அந்த மண்டபமே பயங்கரமாக எதிரொலி செய்தது: அப்படி அலறினான் அவன்! அடுத்த வினாடி அவன் நெஞ்சு பிளந்தது! அந்த அற்புத சிலையைச் செதுக்கிய தன்னுடைய உளியைக் கொண்டே தன் மார்பை குத்திக்கொண்டு, மல்லாந்து விழுந்தான், கண்ணன்.

# சிற்பி




தீபாவளி தினம். பெண் இனத்தின் 'கல கல' வென்ற துயிலொலி. திரும்பும் இடமெல்லாம் ஒவ்வொரு அணங்கின் காத்திலும் தேங்காய், பழம், புஷ்பம், கற்பூரக் தவியல். அம்மன் சன்னதியிலே 'ஜே ஜே' என்ற கூட்டம். கோவிலே, அன்று புது உத்சாகத்துடன் புத்தொளி வீசிற்று.

சன்னதிக்கு அடுத்தாற்போல் இருந்தது கல்யாண மண்டபம். அதன் வடசாரில் வரிசை வரிசையான பிச்சிப் பூ சரங்கள் குழைந்து தொங்க, தென்றல் இன்காற்றை வாரி வீச, பக்தர்களின் 'சிவ சிவ' என்ற குரலொலி மங்கள கோஷத்தை எதிரொலித்தது ஆயிரக்கால் மண்டபத்திலே!

அங்குதான் சரஸ்வதி உட்கார்ந்திருந்தாள். அவள் கண்ணிமைகள் அசையவில்லை. அவளின் சிந்தனை முழுதும் அந்தச்சிலையையே தழுவிக்கிடந்தது!

"சரசு! உலகம் என்று ஒன்று இருப்பதை அடியோடு மறந்துவிட்டாய்போலிருக்கு! நான் அருகிலிருப்பதுகூட ஞாபகமிருக்கோ என்னவோ! ஆமாம். சரஸ்வதியும், சரஸ்வதியும் ஒன்ருனல் எனக்கு அப்புறம் வேலை இல்லைதான்" என்று குறும்பாக அவளைக் கிண்டினுன் கண்ணன்.

சரஸ்வதிக்கு அப்புறந்தான் உணர்வு தட்டிற்று. "ஆகா! இந்த சரஸ்வதியின் சிற்பமொன்றிற்கு ஈரேழு லோகங்களைப் பணயம் வைத்தாலும் ஈடாகுமா? என்ன ஒயிலான பாணி! வதனத்திலேதான் என்ன பாவம்! கரங்களில் பண்ஸடைய யாழ். அதிலே மின்னித் தெறிக்கும் நுண்ணிய தந்திகள்கூட அல்லவா தெளிவுடன் வடிக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஒரு சிற்பமே நமது தமிழ் நாட்டின் சிலா கற்பனையை கோடானு கோடி வருடம் எடுத்து ஓதுமே! அதோ பாருங்கள்! கலையான இந்தச்சிலையைச் செதுக்கியிருக்கும் சிற்பி, உண்மையில் கலைவாணியின் மேல் எவ்வளவு அடங்காக் காதல் கொண்டிருக்க வேண்டும்!"

"என்ன? இந்த சரஸ்வதியின்மீது நான் கொண்டிருக்கும் காதலைவிடவா?"

"போங்கள்! சந்தர்ப்பமில்லாமல் எப்பொழுதும் கேலிதான்! அது கிடக்கட்டும்; தாங்கள் மட்டும் ஒரு சிற்பியாக இருந்து, இதைப் போன்ற ஒரு சிலையை சிருஷ்டிப்பீர்களாயின்......ஆ! உலகம் என்னை ஒரு சிற்பியின் காதலி என்று கூறுவது ஒன்றே என் வாழ்க்கையின் ஆயுட்காலத்திற்குப் போதுமே!"

"சரசு! சத்தியமாய்ச் சொல்கிறேன். நான் ஒரு சிற்பிதான்! கந்தர்வ ஒளிவீசும் உன்னுருவையே ஒரு சிலையாகச் செதுக்கி அதையே எனது இதய கோவிலில் பிரதிஷ்டை செய்து உனக்கு எனது காதலின் வலிமையை..." என்று 'படபட'ப்போடு பேசினுன் கண்ணன். சரசு அவன் வாயைச் 'சட்' டென்று பொத்தினுள். "ஐயோ! என்ன இது! காதல் பித்தில் நான் விளையாட்டாகப் பிதற்றியதை நிஜமாய் எடுத்துக்கொண்டீர்களே! பிரமாண்டமான சிற்பக் கலைக்கும் பழக்கமில்லாத தங்களுக்கும் எவ்வளவு தூரம்! அத்துறையில் சிறிதுகூட பயிற்சியில்லாத தங்களால் எப்படி ஒரு சிலையைச் செதுக்கமுடியும்? பிரமாணம் செய்யலாமா?"

கண்ணனுக்கு தூக்கிவாரிப்போட்டது! பிரமாணம்! என்ன பயங்கரம்? அதுவும் கலைக்கே ஆதர்சனமான கலாவாணியின் சிலையின் முன்னு? அவன் புத்தி ஏன் இப்படிப் போயிற்று? எங்காவது காலை உதயசூரியன் அப்பொழுதே, மேற்கு அடிவானத்தின்

தாசிச் சிதர்களை முத்தமிட்டு முடியுமா?

திடீரென்று லட்சக்கணக்கான தீப்பொறிகள் சிலையிலிருந்துவெளிப்பட்டு உடல்முழுதும் பொசுங்குவது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது கண்ணனுக்கு. அவனால் தாளவில்லை. சிரம் சுழன்றது. வெறிபிடித்தவன் போல அந்தச்சிலையை ஏறிட்டுப்பார்த்தான். வாணியின்வதனத்திலே சாந்தம் ததும்பியது.

நல்லவேளை! எப்பொழுதுமே ஆள் நடமாட்டம் அதிகமில்லாத ஒரு ஒதுக்குப்புறம் அது. அதனால்தானோ என்னவோ இவர்களின் விபரீதநிலையை வேலையற்ற மனிதக் கும்பல் கண்டுகொள்ளவில்லை.



கோடைகாலமும் வந்து சென்றது. தனிமணி அறையின் அலங்கார மஞ்சத்தில் அமர்ந்திருக்கும் புதுப்பெண்ணின் இளம்



கனவுகளைப்போல மாக்கிளைகள் சிறு சிறு தளிர்கள் விட்டு துளிர்த்தன. மது நிரம்பிச் சொட்டும் மலர்க் கிண்ணங்களை நோக்கி, வரி வண்டுகள் சப்தமிட்டு ஓடிவந்தன. பெண்களின் சுருள் குழல்களில் மணம் வீசின ரோஜா மலர்கள்.

வாணியின் முன், தான் அன்று செய்த பிரமாணம் கண்ணனின் நெஞ்சிலே உறுத்தியது. உண்மையாகவே தான் ஒரு சிற்பியாக ஏன் மாறக்கூடாது? அவன் மனதிலே இரவு பகலாக இடைவிடாத போராட்டம். எப்படியும் சிற்பக் கலையைக் கற்றுக்கொண்டு சாசாவின் உருவத்தை ஒரு சிலையாகச் செதுக்கி, அதன் மூலம் தனது காதல் இதயத்தின் வலிமையை அவளுக்குத் திறந்து காட்ட வேண்டுமென்று திடசங்கல்பம் செய்து கொண்டான்.

சிற்ப சாஸ்திரங்களை நிறையப் படித்தான். பல சிற்பிகளைக் கலந்தான். முயன்று முயன்று சிலை செதுக்கமுற்பட்டான். ஆரம்பத்தில் விகாரமாயிருந்தது. இப்படி எவ்வளவோ தடவைகள். சிலை அடித்ததும் ஒவ்வொரு தடவையும் அவனுக்கு ஒவ்வொரு அழகு நுட்பம் வெளிப்பட்டது. அழித்தும், திருத்தியும், நிமிர்த்தியும், உடைத்தும் மெல்ல மெல்ல கலைப்படியில் ஏறிக் கொண்டே சென்றான்.

கலையினுள்ளிருந்து வரும் கலை நுணுக்கத்தை அறிய தன் காலம் முழுமையும் செலவிட்டான் கண்ணன். அவன் ஜீவன் பசி, தாகம் ஒன்றையும் கவனியாமல் சிலா சிருஷ்டியிலேயே ஊன்றிவிட்டது. முதலில் கண்ணனின் உள்ள மேடையில் அமர்ந்து ஜொலித்த அதே 'புவியழகி சாசா' மெதுவாக 'கலையழகி சாசா'வாக அவனுக்குத் தெரியாமல் மாறிக்கொண்டே வந்தாள். கண்ணனின் மண்ணின் காதல் தற்போது பூரண வளர்ச்சிபெற்று விண்ணின் காதலாகி அமரத்துவமெய்திவிட்டது.

கண்ணனுக்குக் காதலி இப்பொழுது அந்த சிலை சாசாதான்! கலாபீடத்தை தொட்டுவிட்ட தன் உள்ளத்தை, கேவலம் அனித்தியமான எலும்பு, இரத்தம், மாமிசங்களாகிய சாசாவின்மீது திருப்புவதென்பது கண்ணனுக்கு தற்போது அசாத்தியமாகிவிட்டது. ஒருவேளை இது கலைவாணியின் அமர உலக நியதியோ என்னவோ?

கண்ணீர்த் துளிகள் தடுமாறி விழுந்தன.



மாறிகால! 'ஊதைக் காற்றை'ப் பொறுக்க முடியாது! துடிக்கும் ஏழையின்! ஆடையற்ற உடலைப்போல அவள் உதடுகள் படபடத்தன.

மறுநாள் தீபாவளிக் கொண்டாட்டத்தைப் பற்றிய குதூகலம் உழவர்களின் முகத்திலே பிரதிபலித்தது.

எவ்வளவு நாட்கள் ஓடிவிட்டன. அவளும் எவ்வளவு தடவை இதுபோல் அந்த மண்டபத்திற்கு வருவதும் அவனுடன் மன்றாடுவதும், கெஞ்சுவதும் விரக்தியோடு திரும்புவதுமாக இருந்திருக்கிறாள்.

"டிக்! டிக்!"

அதற்குமேல் சரஸ்வதியால் பொறுக்கமுடியவில்லை. 'பளிச்'சென்று கண்ணன் பிடித்திருந்த உளியைப் பற்றி வெடுக்கென்று இழுத்து விட்டு விம்மி விம்மி அழுதாள்.

கண்ணன் தோளில் தன் முகத்தை சரசு புதைத்தபடி "நெஞ்சிலே காற்று புகுவதும் தெரியாது சிற்ப வேலையிலீடுபட்ட மாணு வஸ்தையை இனியாகிலும் விட்டுவிடுங்கள்! வாருங்கள் ஆலயத்திற்குப் போவோம்! அன்றைய தீபாவளி தினத்திலே தாங்கள் செய்த பிரமாணத்தை விட்டுக் கொடுக்கும் படி நாளைய தீபாவளியிலே வாணியின் பாதத்தில் விழுந்து கெஞ்சுவோம்! கலைவாணி ஒரு கருணை சமுத்திரம் தன் பச்சிளம் குழந்தைகளின் தீனக் குரலுக்கு அவளின் அகண்ட செவிகள் இடம் தரும். அந்தச் சிலையைத் தூக்கி எறியுங்கள்!" என்று மாலை மாலையாய் கண்ணீர் சொரிந்தபடி கெஞ்சினாள் சரசா.

மெதுவாய் தலையை நிமிர்த்தி சரசாவின் கன்னங்களில் கீற்றெடுத்திருக்கும் கண்ணீர் தாரைகளை அர்த்த மற்றுப் பார்த்தான் கண்ணன். "என்ன சொல்லுகிறாய் சரசா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்றான்.

கண்ணனின் இதழ்கள் இதை உதிர்த்தது தான் தாமதம், சரசாவிற்கு கட்டற்று கிளம்பி விட்டது ஆவேசம்! "புரியவில்லை! ஆமாம் எப்படிப் புரியும்? குளுமையான இரவு நேரத்தில் வான வீதியில் பவனி வரும் மதி அரசிகை நிறைய ஒளிக் கதிர்களை வாரி வாரித் தூவி என் மேனியை எவ்வளவு தடவை தகிக்க விட்டான்! கருநீல சால்வை போர்த்து கண் சிமிட்டும் நட்சத்திர மங்கைகள் எத்தனை தடவை என் உள்ளத்திலே புகுந்து ரணகளரி செய்தனர். வசந்த மோசக்காரி, தென்றலையும், மலரையும், மணத்தையும், குயிலையும், மயிலையும் என் முன்னே நடனமிடவிட்டு எவ்வளவு தரம் பிரேமாக்கினியில் என் இதயத்தைத் தோய்த்து எடுத்து துடிக்கச் செய்திருக்கிறாள். இவையெல்லாம் உங்களுக்கு எப்படிப் புரியும்? என் இதயப் பாற்கடலில் நிமிஷந்தோறும் உங்களுக்காக நான் திரட்டி வைத்திருக்கும் காதல் அமுதம், ஐயோ! காய்ந்து ஆவியாகிறதே! இது உங்களுக்குப் புரியவில்லையா? ஆம்! அன்று வாணியின் சிலைமுன் நின்று கொஞ்சிய பழைய காதலரில்லை தாங்கள். கல்லைக் கட்டி அழும் ஒரு கானல் மாறாட்டம்!"

"சரசா! போ வெளியே!" என்று உரக்கக் கத்தினான் கண்ணன்.

சரஸ்வதி ஒரு கணம் ஸ்தம்பித்துப் பேச்சற்றுப்போனாள். மீண்டும் தன் பெண் சக்தியையெல்லாம் திரட்டிக்கொண்டு "இந்தப் பிரபஞ்சம் முழுதும், ஒரு அபலைப் பெண்ணிற்கு எதிராக சதி செய்கிறது. நீங்கள்! உங்கள் கையால் உருவாகும் அந்தச் சிலை! அதற்குக் காரணமாயிருக்கும் அந்தக் கலைவாணி! எல்லோரும் என்னை ஏமாற்றத் தீயிட்டுக் கருக்கிய காதகர்கள்!"

தீப்பொறி பறக்க கண்ணனால் சிருஷ்டிக்கப்பட்ட அந்தச் சிலையை விழுங்குபவளைப் போல்,ஒரு பார்வை பார்த்துவிட்டு அங்கிருந்து விரைந்து போனாள் சரசா!

தீபாவளி தினம். பாரதியின் தேவகானங்களை இனிமையாகப் பாடிக்கொண்டு பெண்கள் வாசல்களில் கோலமிடுகின்றனர். குழந்தைகள் படுக்கையில் தூங்கியபடி அன்று தாங்கள் சுடப்போகும் பட்டாசுகளையும், வாணங்களையும் பற்றி புதுப் புது கனவுகளைக் கண்டு கொண்டிருக்கின்றனர். மங்கிய இரவு: இன்னும் பொழுது புலரவில்லை.

கண்ணன் உற்சாகத்துடன் எழுந்தான். தான் வெற்றியுடன் முடித்து விட்ட கலையழகி சரசாவின் சிலையின் கடைசி வேலையான 'நயனத்திறப்பை'ச் செய்துவிட சுறுசுறுப்பாய் ஸ்னானம் செய்து விட்டு சிலை வைத்திருந்த மண்டபத்தை நோக்கி கிளம்பினான்.

வைகையின் இதய கமலத்திலமர்ந்திருக்கும் அந்த ஒய்யார மையமண்டபத்திலே தன் சிலையை உலகம் கண்டு களிகூறப்போகிறது என்று அவனுள்ளம் துள்ளியது. கையில் வைத்திருக்கும் சுத்தி, உளிகளை பெருமிதத்துடன் தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டான்.

மட மடவென்று மண்டபத்தின் படிக்

(8-ம் பக்கம் பார்க்க)

# இவர்களை விட்டுவைக்கலாமா?

சக்திமோஹன்

வெள்ளை ஏகாதிபத்யத்தை, இந்தியாவைவிட்டு வெளியே போ என்றோம்!

அந்தக் குரல், ஆசியாவைவிட்டு வெளியே போ என்ற அளவுக்கு நீண்டது.

இப்போது, உலகத்தைவிட்டே ஒழி என்று சொல்லிக்கொண்டிராமல் கழுத்தைப் பிடித்துத்தள்ளவேண்டிய ஸ்திதிக்கு அக்ரமப்பட்டுவிட்டது, அந்த ஏகாதிபத்யத்தின் உதிரிப்போக்கு!

உலகம ஏமாறிக்கொண்டிருந்தவரை அந்த மேடையிலும் ஏகபோகமாய் ஏறி இறங்கிய ஏகாதிபத்யத்திற்கு, ஆண்மையோ அல்லது பெண்மையோ, இரண்டில் ஒன்று இருக்கத்தான்வேண்டுமென்ற நினைவு நீங்காமலிருந்தது நிஜம்; ஆனால் ஏமாறிய பாதையை விட்டு உலகம் விலகியவுடன், அந்த ஏகாதிபத்யத்திற்கு ஆண்மையுமில்லை பெண்மையுமில்லை என்பதை விளங்கிக்கொண்டு விட்டது!

ஒரு நாடு; அது எவ்வளவு பெரிய வல்லரசாயினும் சரி; எவ்வளவு சிறிய பிரதேசமா



னும் சரி; அதுதன் தரத்திற்குத் தகுந்த முறையை, முனை தேயாமல் வைத்துக் கொண்டு, சொல்வதையும் செய்வதையும் சரி நிறையுடன் பாதுகாக்காதபோனால், அந்த நாடு உலகின் மதிப்பிலிருந்து ஒதுங்கி உருமாறித் திண்டாடவேண்டியதை எந்தச் சிபாரிசும் தவிர்க்கமுடியாது!

உலக மதிப்பிற்குப் பிசகாகவும், ஜனஜாதியின் ஆத்திரம் கொப்புளிக்கும் தோரணையிலும் நடந்துகொள்ளுகிற எந்த நாடும், சந்தி சிரிக்காமல் தப்பிய கதை இல்லவே இல்லை!

ஆங்கில நாடு. ஆம்! கொஞ்சிக்கொஞ்சி நஞ்சைக் கொடுத்து உலகின் பெரும் பகுதி மக்களின் வாழ்வை வாட வைத்த வல்லரசு தான்!

பிரதேச ஆசையிடம், நியதியை விற்று விட்டு, அநீதிக்கு அழகு முலாம் பூசி, ஆசியாவில் ஆடவிட்ட அனுச்சாரப் புல்லரசு!

சுத்தமான ஒழுங்குமுறையில், ஆயிரமாயிரம் ஒழுங்கீனத் தழும்புகளைப் போட்டு, ராஜீயத்திற்கும் ஒழுங்குக்கும் உள்ள தொடர்பைத் துண்டித்துவிட்ட தோசிச் சாம்ராஜ்யம்!

சொல்லுகிற உறுதிகளை, சுயநலத்திடம் கைமாற்றுக் கொடுத்துவிட்டு, காரியாம்ஸையில் கீறல் போடும் கத்துக்குட்டி ஏகாதிபத்யம்!

ஏக இந்தியாவைப் பாகப்படுத்தி, இந்திய ரீதியையே குப்புறக் கவிழ்த்துவிட்டு, அதே இந்தியாவை கசாய்க்கடையாக மாற்றிக்கொண்டிருக்கிற மானந் தவறிய ஆதிக்கம்!

உலகப் பொதுவுடைமையை எங்கும் நிரவவிடாமல் அங்கங்கே தடுத்துத் திருப்பிக்கொண்டிருக்கும் தருதலை வர்க்கம்!

அமைதியில் உல்லாஸிக்கவேண்டிய உலகில், இரண்டு மஹாயுத்தங்கள் பிறப்பதற்குக் கருக்கூட்டி, மூன்றாவது யுத்தத்திற்கு முகடுகட்டுகிற முழுமைகெட்ட புழுதி படிந்த அதிகாரம்!

ஆம்! அதுவேதான்! இந்த அலக்கழிந்த சாம்ராஜ்யம் உலகில் ஊடாடுகிற வரை; மனித நியதி, மனித சமுதாயத்தின் மத்தியை எட்டிப்பார்க்கவே முடியாது!

முந்திப் பிறந்த இரண்டு மஹாயுத்தங்களுக்கு எந்தப் பிரிட்டனின் பிரதேச ஆசை காரணமாக இருந்ததோ, அதே காரணம்தான் மூன்றாவது யுத்தத்தைச் செதுக்கிக்கொண்டிருக்கிறது! இந்தப் பிரிட்டன் உலகைவிட்டே ஒழிய வேண்டியதுதான் என்று மனிதஜாதி சொல்வதை நிறைவேற்ற மற்றொரு ஹிட்லர் தோன்றப் போவது தொலைவிலில்லை!!

இந்தியாவை இரண்டு கூறு செய்யப்படாது; ஒன்றாயிருப்பதே நலம்; என்று ஒப்பாரி வைத்துவிட்டு, கூறுபோடும் காரியத்தை வேகம் வேகமாகச் செய்து முடித்து, இப்பொழுது பிரிபட்ட பாகிஸ்தானுக்கு ஆயுத உதவி செய்கிறது, இந்திய யூனியனில் சம்பளம் வாங்கிக்கொள்ளும் மஹாபிரிட்டன்!

இந்த வகையில், இந்த மஹாபிரிட்டன் இனியும் இந்தியாவில் இருக்க யோக்யதை இல்லை-இருக்க விடுவதும் இந்தியாவுக்கு நல்லதல்ல என்கிறது இந்தியா!

மகிமையைத் தகனம் செய்துவிட்ட பிரிட்டனுக்கு 'மஹா' பட்டம்!

இந்திய சமுதாயம் விரும்பாத பாகிஸ்தானை உற்பவித்து, அதன் அத்துமீறிய போக்கிற்கு ஆயுத சப்ளை செய்கிற ஒழுங்கின் விரோதிகளுக்கு, இந்திய யூனியனின் தலைமை!

வெட்கம்! வெட்கம்!! வெட்டிவிடமுடியாத வெட்கம்!!!

அருமையான கனியை கையிலே வைத்துக் கொண்டு, காயின் பசுமையில் லயித்து கனியைப் பறிகொடுத்த உவமை இந்தியாவுக்கே சொந்தமானதை நினைத்துப் பார்க்கவே நெஞ்சு சுண்டுகிறது!

உலக சக்திகளையெல்லாம் ஆகர்ஷிக்கும் அதீதமான திறமை இந்தியாவுக்கு உண்டு; ஆனால் வெள்ளைக்காரன் வெட்டிய வழியில் வந்த அதன் சுதந்திரத்தின் எதிர் காலத்தை மதிப்பிடுவதில் தவறி விட்டதென்பதை மூடிவைக்க முடியவில்லை.

வெள்ளை ஏகாதிபத்யம் நீதியை விட்டு வெகுதூரம் விலகி விட்ட விஷயம், எல்லோரையும்விட இந்தியர்களுக்கு சுத்தமாய்த் தெரியும். அநீதியின் அடிப்படையில் சாம்ராஜ்யத்தை எழுப்பிக் கொண்டிருக்கிற ஏகாதிபத்யம், சரியான சந்தர்ப்பத்தில் அதன் பாதையில் அழைத்து வந்த இந்திய விடுதலையில் ஏதேனும் உருப்படியான நன்மைகள் சாத்தியமாகுமா? வென்பதைச் சர்ச்சையிடுவதில் அனுபவப்பட்ட இந்தியா அலுத்து விட்டது! ஆகவேண்டிய நன்மைகள் அனுதியாகி, ஆகவேண்டாத அக்ரமங்கள் அடைப்பிடித்து விட்டன.

அகில இந்தியாவின் ஏகோபித்த அபிப்பிராயத்திற்கு மாறாக உருவான இந்திய யூனியனின் தலைமையை, மவுண்பாட்டனின் கையில் கொடுத்த தவறு, இன்று எவ்வளவு அபாயங்களை சாகுபடி செய்து விட்டதென்பதை நினைக்கையில், இந்தியாவின் முதல் வேலை, இருக்கிற வெள்ளைக்காரர்களையெல்லாம் ஒருவர் விடாமல் தேடிப்



பிடித்து ஐரோப்பாவுக்கு அனுப்ப வேண்டியதே என்ற முடிவு சிக்கலில்லாமல் வளருகிறது!

இந்திய யூனியனின் முகப்பிற்குக்காவல்; பாகிஸ்தான் படையெடுப்பிற்கும் உடந்தை!

இந்திய யூனியனுக்குத் தலைமை; பாகிஸ்தான் ராணுவத்திற்குத் தளபதி!

ஒரே இந்தியாவுக்காக தளத்தை உழுவது; விதைப்பது பிரிவினை வித்து!

ராஜஸ்தான் கூடாதென்பது வாதம்; பிரதிவாதத்துக்குச் சட்டம் கட்டிக் கொடுப்பது சமஸ்தானங்களுக்கு!

வெளியே போய்விட்டோம் என்பது பிரச்சாரம்; வெளியே போனது இந்தியாவின் அமைதி!

இப்படித்தான் இன்று இங்கிலீஷ் வர்க்கம் இந்தியாவில் இருந்து கொண்டிருக்கிறது.

இந்திய யூனியன் தலைமை, கைவசமிருக்கிற திறமையை இன்னமும் கட்டிவைப்பது, கடமையை தட்டிக் கழித்ததாகும்.

ஜின்னு படையெடுப்பு நடத்துகிறர், வேறு பெயரால்; நிஜாம்துள்ளுகிறர், மந்தி விரட்டுக் காளை மாதிரி! இதற்கெல்லாம் ஆதி எது? ஜின்னுதிக்கமும், நிஜாமியமுமா?

ஐக்கிய இந்தியாவும், இங்கிலீஷ் ஆதிபத்யமும் போடவேண்டிய சண்டையை, இந்திய யூனியனும், பாகிஸ்தானும் போடுகின்றன, வெள்ளைக்காரரின் மாரலில்!

வெள்ளைக்காரனிடம் வைத்திருக்கவேண்டிய மாணப் பந்தயத்தை, இந்திய யூனியனிடம் வைத்து, மானத்தைத் தியாகம் செய்கிறது நிஜாமியம்!

எல்லாம்;! செல்லாமல் போன ஆதிபத்யத்தின் கைவேலை.

வெள்ளை ஆதிக்கம் இருப்பதால், இந்திய அமைதி கலைகிறது என்ற அபிப்பிராயம் மாறவேண்டுமென்பதற்காகவே இத்தனை அக்ரமங்களைச் செய்கிறது அந்த அபத்த ஆதிபத்யம். இருக்கும்போது கலைந்த அமைதி, இல்லாதபோது அதிகப்படுவானேன்? என்ற கேள்வியை கெட்டிக்காரத்தனமாய் கிளப்பவும் தவறவில்லை. அந்த இனம்!

அப்பட்டமான அமைதி கவிய வேண்டிய இந்தியாவிலே, ஆபாஸமான கலவரங்கள் நடப்பதற்குக் காரணம், ஜின்னுவோ, நிஜாமோ அல்ல.

உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்கிற சண்டாள சாம்ராஜ்யமே!

காஷ்மீரில் மலைஜாதியினர் படையெடுப்பதற்கு, ஆயுத உதவி கொடுப்பது பாகிஸ்தான் என்பது மேற்பூச்சான தீர்ப்பு! இருக்கட்டும். பாகிஸ்தானே உதவட்டும். உதவக்கூடிய அளவுக்கு, பாகிஸ்தானுக்கு ஆயுத சக்தி எது? சில லட்சம் ஜனத்தொகையையே ரட்சிக்கத் திணறுகிற பாகிஸ்தானை, இன்னும் சில லட்சம் மக்களை இழந்துக்கொள்ளும் அளவுக்குத் தயாரித்து, பல கோடி மக்களின் சக்தியை நிரப்பிக்கொண்டிருக்கிற இந்திய யூனியன் மீது படையெடுப்பு நடத்தும் துணிச்சலைத் திணித்தது யார்? சமீப எதிர்நாட்களில் உலகையே தலைவணங்க வைக்கும் வலிமைக்கு அடியிடமுடிந்த இந்திய யூனியனுக்கு எதிரே, 'புல்தடுக்கி பயில்வானி'ன் கடைசிகாலக் குஞ்சாகிய நிஜாம், மீசையை முறுக்கிநிற்க, முதுகைத் தட்டிக்கொடுப்பது எந்தக் கைகள்?

அவ்வளவும் இந்திய உதிரத்தில் திமிரேறிய இங்கிலீஷ் ஆதிபத்யத்தின் திருகுதாளங்கள்!

இந்த வர்க்கத்தில் ஒரு குஞ்சுகூட இந்தியா

வில் இருப்பது பெரிய அபாயம்! அவர்களை இனியும் விட்டுவைத்தால் இந்திய விடுதலை அடுத்த சந்திப்பு, அடிமைதான்; சந்தேகமே இல்லை!

இன்று ஜின்னாவும், நிஜாமும் கூத்தடிப்பது வெறும் பேத்தல். சகலவலிமையும்பெற்ற இந்திய யூனியன், சவுக்கை எடுத்து திருப்பினால், ஜின்னாதிக்காரம் நிஜாமியமும் நிமிஷத்தில் நிர்மூலமாகி விடும்! வெள்ளை வர்க்கம் இந்தியாவை விட்டு எடு பட்டு விட்டால், பாகிஸ்தானும், ராஜஸ்தானும் எடுபட, உழைப்பின் தயவு கூட அநாவசியம்!

குறிப்பாக இந்தியாவுக்கு அமைதியும், சுபிட்ச வாழ்வும் அவசியமே தவிர, வெள்ளைக்காரரின் தோழமை அவசியமல்ல. இன்றையப் போக்கில், வெள்ளைக்காரரின் தோழமையைக் காட்டிலும், பகைமையில் அதிகச்சாதகம்சாத்தியமாகமுடியுமென்பதற்கு தீர்க்கதரிசனம்தேவையில்லை,

வெள்ளைக் காரரின் அதிகாரத்தையும் அனுபவித்து விட்டோம்; தோழமையையும் அலசிவிட்டோம்; இனி பகைமையையும் வர விட்டுப் பார்க்க வேண்டியது தான்! இதில் எது நேர்ந்தாலும் அவசியமில்லை; அடுத்த கட்டத்தில் அபூர்வமான அமைதியில் ஆரவாரிக்கலாம்!

ஜின்னாவையும், நிஜாமையும் நல்லவர்களாக்குவதற்கோ, அல்லது அவர்கள் திமிறினால் கெட்டிவாங்குவதற்கோ, இந்தியாவின் தேவை, வெள்ளைக்காரரின் பகைமையே! ஜின்னாவையும், நிஜாமையும் எதிர்ப்பதில் விளையமுடிந்த அமைதியைவிட, வெள்ளைக்காரரை வெளியேற்றுவதில் அதிகமான—நிரந்தரமான அமைதியை நிறுத்திவிட முடியும்!

இந்தியயூனியனுக்கு, பாகிஸ்தானும், நிஜாமும் எதிரிகளல்ல; அவைகளை எதிரிஸ்தானத்தில் வைத்தால் இந்திய யூனியனுக்குத் தான் அகௌரவம்! பாகிஸ்தானும், நிஜாமும் இந்திய யூனியனுக்கு எதிரி என்ற குரல், பிரிட்டனின் சாரல்! பிரிட்டன் எடுபட்ட பிறகு அந்தக் குரல், அடுத்தவனுக்குக் கூடக் கேட்காது! எனவேஎலிஸபெத் திருமணத்துக்குப் போகிற மவுண்ட்பாட்டன், லண்டனிலேயே தங்கிவிட வேண்டிய வகையை வகுக்க வேண்டியது இந்திய யூனியனின் முதல் வேலை. காஷ்மீரில் போர்தொடுக்கிற ஜின்னாவையும், தனியரசு செய்ய தடித்தனமாய் கொட்ட மடிக்கிற நிஜாமையும் மூக்காடுபோட்டு மூலையில் வைக்கிற வேலையை இந்திய யூனியன் போகிற போக்கிலேயே செய்து விட முடியும். இந்திய யூனியனிலிருக்கிற முஸ்லிம்களே, பாகிஸ்தானையும் நிஜாமையும் எடுத்தெறியத் துடிக்கும்போது, ஏனைய சிந்தனை தேவையில்லை.

பொதுவாக பிறந்த வருடம் முடியுமுன்பாகவே, ஒரு சகோதரப் பாகிஸ்தானை, சகோதர இந்தியாவோடு சண்டையிடத் தூண்டி விட்ட ஒரு எகாதிபத்ய வாரிசுதார்களை இந்தியாவில் விட்டு வைக்கலாமா? என்பதை இந்திய ஜாதியே நிர்ணயிக்கட்டும்!

இந்த வேலையில் இந்திய யூனியன் பிந்தினால், ஜின்னாவுக்குப்பின் ஜின்னாக்கள் அலைபெடுத்து விடுவார்கள்! மக்களின் மரியாதையில் உருவாகிய நேருஜியின் சர்க்காரைக் கவிழ்க்க, மதத்தின் பெயரால் 'பதவியைப் பறிக்கும் கயவர் கும்பல் பெருகிவிடும்!

மதத்தின் பெயரால் அமையும் எந்த அதிகாரமும் இந்திய மக்களுக்கு உடன்பாடில்லை. நேரு சர்க்காரை மாற்றிவிடும் எந்தசக்திக்கும் ஒத்துக் கொடுக்க இந்திய ஜாதியில் ஒரு மனிதனும் தயாரில்லை! மதத்தின் பெயரால் அமைந்த பாகிஸ்தானுக்கு அனுகுணம் காட்டிய அதே பிரிட்டன் தான் மதத்தின் பெயரால் இந்தியயூனியனை மாற்றியமைக்க நேருஜியை எடுத்துவிட வழி வகுக்கிறது! எந்தரீதிக்கும் பொருந்தாத இங்கிலீஷ் மரபினரை இந்தியாவில் விட்டு வைப்பது நீராத்துக்கத்திற்கு உரம் போடுவதாகும்! மதத்தின் பெயரால் நடக்கிற அக்ரமங்கள் அழிய வெள்ளை வர்க்கம் எடுபடுவதே வழி!

# யார் வைத்த தீ?

கோ. ராமகிருஷ்ணன்.

சுதந்திரத் திருவிழா முடிந்தவுடன், மனிதருள் மாணிக்கம் தலைவர் நேருஜி பிரதம மந்திரியானவுடன் மக்கள் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணினர்.

நாளுக்கொரு, இல்லையேல், வாரத்திற்கொரு, அதுவுமில்லாவிட்டால் மாதத்திற்கொரு புதுத்திட்டமாவது, மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கென அமுலுக்கு கொண்டுவரப்படும்; அதன் பின்னர் தமது நீண்ட நாள் துயரங்களெல்லாம் தொலைந்தே போகும் என்று எண்ணி, எண்ணி பூரிப்படைந்தனர்.

கொள்ளை லாப கள்ளமார்க்கெட் கிராதகர்கள் ஊர், ஊராய் வேட்டையாடப்பட்டு, முச்சந்திகளிலே கூட்டங்கூட்டமாய் நிறுத்தப்பட்டு, அவர் தம் கிராதகச் செயல்களினாலே இதுவரை பாதிக்கப்பட்ட ஏழை எளியவர்களினாலே "தூ, தூ"வென காறி உமிழப்பட்டு, கடைசியாக-அன்றொரு நாள் நேருஜி அவர்கள் கூறியதேபோல்-பகிரங்கமாக தூக்கிலிடப்படுவார்கள் என எல்லாரும் கனவு கண்டார்கள்.

கொஞ்சமும் லஜ்ஜையின்றி லஞ்சம்வாங்கி கொடுப்பதிலேயே கருத்தாயுள்ள ஈனஜாதி அதிகாரிகளுக்கும், கொள்ளை லாபமடிப்பதையே தமது குலத்தொழிலாகக் கொண்டுள்ள மனிதரூப பணப் பிசாசுகளுக்கும் மட்டுமின்றி வேறு யாருக்கும் செல்லாக்காசு அளவிற்கும் பயன்படாத ரேஷன் முறைகளெல்லாம் ஒழிந்துவிடும்; பின்னர் விரும்பிய பொருளை யாருடைய தயவுமின்றி, வேண்டியவரை வாங்கி சுகவாழ்க்கை நடத்தலாம் என்றெல்லாம் நம்பினார்கள்.

பல்லாயிரக்கணக்கான மைல் தூரங்களை ஒரு சில நிமிட நேரங்களிலே கடந்துவிடக் கூடிய பிரயாண வசதிகள் நிறைந்த இந்நாளிலே, நம் நாட்டில், பிராணாபத்து ஏற்படக்கூடிய அவசர சந்தர்ப்பங்களிலும் விரும்பியபடி வேண்டும் இடங்களுக்குச் செல்வதற்கு மார்க்கமின்றி திண்டாடும் கேவல நிலைமைகளெல்லாம் இனி இருக்கவே இருக்காது என்றெல்லாம் எதிர்பார்த்தார்கள்.



பாரத மக்கள் எதிர் பார்த்தது இவை மட்டு

மா? இல்லை, இன்னும் எவ்வளவோ! தலைவர் நேருஜியும் பதவியேற்று மாதங்கள் பலவாகி விட்டன. ஆனால், மக்கள் எதிர்பார்த்த நன்மைகளில் ஏதேனும் ஒன்றாவது கிடைத்துள்ளதா எனில், வருத்தத்துடன் இல்லையென்று சொல்லவேண்டியுள்ளது. நன்மை தான் கிடைக்கவில்லை; வெள்ளைக்காரன் கொடுங்கோலாட்சியில் நமக்கிருந்த மன நிம்மதியாவது இப்பொழுது இருக்கிறதா எனில், 'அதுவும் இல்லையே' என ஏங்க வேண்டியுள்ளது. நாளுக்கு நாள் கொலையும், கொள்ளையும், துவேஷத் தீயும் நாடெங்கும் பரவி மக்களின் வாழ்க்கையையே சின்னா பின்னமாக்கிவருகிறது.

நாளைய தினம்எந்தவிதபயங்கரச் செய்தியை நாம் கேட்கவேண்டி வருமோ என்ற நிலை ஏற்பட்டுள்ளது. இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்கும் யுத்தம் வாராமற்போகாதோ என மக்கள் அஞ்சவேண்டிய துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

நாம் எதிர்பார்த்தது என்ன? நடப்பதென்ன? எதிர்பார்த்தது பிழையா? இல்லை. இல்லவே இல்லை. ரஷ்யாவிலே, ஜார் அரசாட்சி முடிந்து, சோவியத் குடியரசு ஆட்சி ஏற்பட்டவுடன் நாட்டில் புதுப் புதுத் திட்டங்கள், திடீர் திடீரென அமுலுக்கு கொண்டுவரப்பட்டு அந்நாடு முன்னேறவில்லையா? ஹிட்லரும், முஸோலினியும் தாம் பதவிக்கு வந்த கொஞ்ச நாட்களிலேயே தத்தம் தேசங்களை வலிமை மிக்க நாடுகளாக உருவாக்கிவிடவில்லையா? எனவே, நாமும் எதிர்பார்த்தோம், இந்தியாவிற்குச் சுதந்திரம் கிடைத்து, நமது தலைவர்கள் நிர்வாகத்தைக் கைப்பற்றியவுடன் பிரமிக்கத்தக்க முன்னேற்றங்கள் ஏற்படும் என்று. அதில் பிழையோ, குறையோ சொல்வதற்கில்லை.

பின்னர், எதிர்பார்த்தபடி நடக்காததேன் என்பது அடுத்த கேள்வி. இக் கேள்விக்கு தகுந்த பதில் கண்டு, குற்றம் களைந்தாலன்றி, நாம் எதிர்பார்த்த இந்தியா உருவாகுமென்பது இந்த ஜென்மத்திலில்லை.

இந்தியாவில் நிலவிவரும் பயங்கரமான, அருவருக்கத்தக்க குழப்பங்களுக்குரிய காரணங்களைக் காண விரும்பும் நாம், குறிப்பாக ஒரு சம்பவத்தை எடுத்துக்கொண்டு ஆராய முற்படின் தெளிவான பதில், சுலபவில் கிடைக்கும்.

இதுவரையில், வங்காளத்திலும், டெல்லியிலும், பஞ்சாபிலும், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களிலும் கலகங்கள் நடைபெற்றன. வெறி பிடித்த முஸ்லிம்கள் ஹிந்துக்களைத் தாக்கிக் கொன்றார்கள்; பதிலுக்கு ஹிந்துக்கள் முஸ்லிம்களை பழி வாங்கினார்கள் என்று கூறப்பட்டது. "சகோதரச் சண்டைவேண்டாம்; இதனால் யாருக்கும் நன்மையில்லை. எனவே சகோதரர்களே, அமைதியை நிலைநாட்டுங்கள்" என காந்தி மகாத்மா, ஜவஹர்ஜி போன்ற இந்தியத் தலைவர்கள் வேண்டுகோள் விடுத்த வண்ணமிருந்தனர். இதே போன்ற மனப்பூர்வமான வேண்டுகோளை பாகிஸ்தான் தலைவர்கள் தக்க தருணத்தில் விடுக்காவிட்டாலும், ஒரு சில சமயங்களில் "சண்டை போடுவது அவ்வளவு நல்லதல்ல" என்பது போன்ற அறிக்கைகளை விடுத்து வந்தனர். ஆகவே, கலகங்களுக்கு காரணம், மதவெறிபிடித்த கயவர்களேயன்றி அரசாங்கங்கள் அல்ல என்ற கருத்தை வெளி உலகத்தாருக்கு உண்டாக்குவது போல இந்திய பாகிஸ்தான் அரசாங்கங்களின் போக்கு இது வரை அமைந்திருந்தது.

ஆனால், கயவர்கள் மட்டுந்தான் இக் கலவரங்களுக்கு காரணம்என்றுசொல்வதற்கில்லை; ஏதோ ஒரு அரசாங்கம் வேண்டு மென்றே கலகத்தை தூண்டி விட்டு வருகிறது என்பதை பட்டவர்த்தனமாய் விளக்கும் சம்பவம் ஒன்று சில தினங்காளக நடைபெற்றுவருகிறது. அது தான் காஷ்மீர் கலகம். இக் கலகம் தோன்றுவதற்கு காரணமாயிருந்த சம்பவங்கள், ஆசாமிகள் எவை, யார் என நாம் காண் போமாகில், இந்தியா முழுவதும் இன்று கொழுந்து விட்டெரியும், இத் துவேஷத் தீ யார் வைத்ததுஎன்பது விளங்கிவிடும்.

கடந்த மகாயுத்தம் முடிந்தது. ஆங்கிலேயன் பார்த்தான்; சர்வதேசங்களும் தனக்கெதிராக அணிவகுத்து நிற்பதை. இந்தியாவிலும் எதிர்ப்பு கனஜோராக உருவாகிவந்தது. இனி இந்தியாவை அடக்கியாள முடியாது; சட்டம் பேசி இந்தியர் செல்வத்தை சுரண்டிச் செல்லமுடியாதுஎன்பதுஅவனுக்கு வெட்டவெளிச்சமாகிவிட்டது. என் செய்வது? இந்தியா வீழ்ந்தாற்தானே, இங்கிலாந்து வாழமுடியும்? அதற்கு வழி? ஆகவே, ஆலோசித்தான். இதுவரை வலிமையின் துணைகொண்டு சுரண்டிச் சென்றசெல்வத்தைஇனி வஞ்சகத்தின் துணைகொண்டு கவர்ந்து செல்ல திட்டமிட்டான். 'மவுண்ட்பாட்டன் திட்டம்'

என்று கூறி சுதந்திரப் பிரகடனம் செய்தான் கூடிய விரைவில், சுதந்திரம் கிடைத்தாற் போதும், பின்னர் எல்லாவற்றையும் சரி செய்து கொள்ளலாம் என்றெண்ணிய தலைவர்கள் அதை ஏற்றுக் கொண்டார்கள். அதன் விளைவுதான், இன்று நாம் காணும் பயங்கர நாசக் காட்சி!

ஆங்கிலேயன் சுதந்திரம் கொடுத்ததென்னவோ வாஸ்தவந்தான். ஆனால் அச்சுதந்திரத்தால் நாம் முன்னேறாதபடி தடுக்க என்னென்ன சதிகள் செய்ய முடியுமோ, அத்தனையையும் செய்து முடித்தபின்னரே அச்சுதந்திரத்தைக் கொடுத்திருக்கிறான் என்பது கவனிக்கத் தக்க விஷயம். பிரிட்டிஷாரின் குறும்புகள் எல்லாவற்றிலும் தலையானது-நமது முன்னேற்றத்தைத் திட்டவட்டமாக தடுக்க வல்லது-சமஸ்தானங்களைப் பற்றி அவர்கள் செய்த வியாக்கியானமாகும். இந்தியா சுதந்திரமடைந்து, பிற தேசங்களைப் போல் அதுவும் முன்னேற்றமடைய வேண்டுமென்பது பிரிட்டிஷாரின் அந்தரங்க எண்ணமாயின் அவர்கள் செய்திருக்கவேண்டியது என்ன? நீதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதற்கு எவ்வெவ் அதிகாரங்கள் அத்யாவசியமெனக்கருதி இது நாள் வரை அமுல் நடத்தி வந்தார்களோ, அவ் அதிகாரங்கள் யாவற்றையும் இந்தியர்கள் வசம் ஒப்படைத்திருக்க வேண்டும். நாணயமும், கண்ணியமும் வாய்ந்தவர்கள் இதை ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனால், பிரிட்டிஷார் ஏனோ அவ்விதம் செய்ய வில்லை?

"சமஸ்தானங்களின் நிர்வாகத்தில் தலையிட சுதந்திரமடைந்த இந்திய, பாகிஸ்தான் அரசாங்கங்களுக்கு எவ்வித உரிமையுமில்லை" என்று பிரிட்டிஷ் திட்டம் கூறிவிட்டது. இந்திய அரசாங்கங்கள், சமஸ்தான நிர்வாகத்தில் தலையிட்டால் சமஸ்தானதிபதிகளுக்குச் 'சீட்டுக்கொடுத்து' அனுப்பிவிடும்; அப்படிப்பட்ட நிலைமையை உண்டாக்குவது, இது நாள் வரை தமக்குத் தொண்டூழியம் புரிந்த சமஸ்தானதிபதிகளை, நன்றியின்றி காட்டிக் கொடுத்தாகிவிடும் என்ற எண்ணத்தின் பேரில் செய்த சலுகை அது. போகட்டும் வடமேற்கு எல்லைப்புற மாகாணமும், சில்ஹெட் ஜில்லாவும் பாகிஸ்தானில் சேரத்தான் வேண்டுமென வற்புறுத்தியது போல், இன்னின்ன சமஸ்தானங்கள் சேர வேண்டிய அரசாங்கம் இது என்றாகிலும் பிரிட்டிஷாரின் திட்டத்தில் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆனால் அவ்விதமும் குறிப்பிடப்படவில்லை. இஷ்டம் போல் ஏதாகிலும் ஒன்றில் சேர்ந்து கொள்ளலாம் என்று கூறிவிட்டார்கள். அதன் பயனாக இன்று இந்திய அரசியல் அல்லோல கல்லோலப்படுகிறது. மக்கள், இந்திய யூனியனில் சேரவேண்டுமென்கின்றனர். மகாராஜன்மார் பாகிஸ்தானில் சேரவேண்டுமென்கின்றனர். அதன் எதிரொலி இந்திய-பாகிஸ்தான் மனக்கசப்பாய் வந்துமுடிகிறது. மனக்கசப்புதீரமார்க்கம்காண்பதில் அரசாங்கங்கள் கருத்தைச் செலுத்துவதா; மக்கள் பசிப்பிணியைப் போக்குவதற்கு திட்டமிடுவதா? அரசாங்கங்கள் நிலை தடுமாறுகின்றன. பிரிட்டிஷ் ராஜதந்திரம் புன்னகை கொள்ளுகிறது!

சரி, இனி காஷ்மீர் தொல்லை வந்த வரலாற்றைக் காண்போம். ஜுனாகாத் என்ற சின்னஞ் சிறு சமஸ்தானம் ஒன்று இருக்கிறதல்லவா? இதன் ராஜா ஒரு முஸ்லிம். அச்சமஸ்தானத்தில் வாழும் பிரஜைகளில் பெரும் பான்மையோர் ஹிந்துக்கள். அத்துடன் இந்திய யூனியனை அடுத்துள்ளது, அச்சமஸ்தானம். எனவே, நியாயமாக நடந்து கொள்ளவேண்டுமாயின் அச் சமஸ்தான நவாப் தமது சமஸ்தானம் இந்திய யூனியனில் சேர்ந்து கொண்டு விட்டதாக அறிவித்திருக்கவேண்டும். ஆனால் யாருடைய துர்ப்போதனையோ, அல்லது அவருடைய அழிவு காலந்தானோ என்னவோ, இருந்தாற் போலிருந்து, தமது சமஸ்தானம் பாகிஸ்தானில் சேர்ந்து விட்டதாக பிரகடனம் செய்தார்.

மக்களுக்கு இது கண்டு ஆத்திரம் பொங்கியது. முடிவை மாற்றிக்கொள்ளும்படி நவாபிடம் மன்றாடினார்கள்; பலன் இல்லை. பின் போராட்டம்! போட்டி சர்க்கார்!! நவாபால் சமாளிக்க முடியவில்லை. எடுத்தார் ஓட்டம் கராச்சி நோக்கி. இது பற்றி, பாகிஸ்தான் அரசாங்கம் என்ன செய்திருக்கவேண்டும்? பொது ஜன அபிப்பிராயத்தை அனுசரித்து நடந்துகொள்ளுமாறு ஜுனாகாத் நவாபிற்கு புத்தி புகட்டியிருக்கவேண்டும். ஜனநாயக முறைக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும்; இந்திய-பாகிஸ்தான் மக்கள் முன்னேறுவதற்கு முட்டுக் கட்டையாய் அமைய வல்ல சம்பவங்கள் நிகழ இடமளிக்கக் கூடாது என்பது பாகிஸ்தான் ஜின்னாவின் எண்ணமாயிருந்திருப்பின் அவர் அவ்விதமே செய்திருப்பார். ஆனால், அவர் அவ்விதம் செய்யாது, ஜுனா

காத் நவாப் நடந்துகொண்ட முறை முற்றி லும் சரியே என வாதிக்க முற்பட்டார். ஆனால் வாதித்துப் பயன்? மக்களல்லவா முடிவு செய்யவேண்டியவர்கள். அவர்கள் இந்திய யூனியனில் சேர்ந்தே தீருவதென்று பிடிவாதமாயிருந்தனர். இது ஜின்னாவிற்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. காஷ்மீரத்தில் குழப்படியை உண்டாக்க குயுக்தி செய்தார். அதுதான் இன்றைய தினம், மாபெரும் சிக்க லாகக் காட்சியளிக்கிறது.

காஷ்மீர், இந்திய சமஸ்தானங்களில் முக் கியமானதொன்று. அதன் மகாராஜா ஒரு ஹிந்து. குடிமக்களில் பெரும்பான்மையோர் முஸ்லிம்கள். மகாராஜா எந்த யூனியனில் சேருவது என்பது குறித்து எவ்வித முடிவும் செய்யாமலேயே இருந்துவந்தார். எந்த சமஸ் தானத்தையும் நிர்ப்பந்தப்படுத்தி தம்முடன் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம் இந்திய யூனியனிற்கு கிஞ்சிற்றும்கிடையாது. மக்களின் அபிலாஷைகள் நிறைவேற வேண்டுமென்பதுதான் அதன் அடிப்படைக் கொள்கை. ஆனால், ஜின்னாவிற்கு இது பிடிக்கவில்லை. காஷ்மீர் இந்திய யூனியனில் சேர்ந்துகொள்ளப்போவதாக ஒரு பீதியை உண்டாக்கி, காஷ்மீர் ராஜாவை விரட்டி விடுவதற்கென குண்டர்களை ஏவிவிட்டார். அவர்களும் தங்களுடைய கைவரிசையை காட்டுகிறோமென்று சொல்லி, காஷ்மீரி லுள்ள ஏழை, எளியவர்களைக் கொன்றுகுவித் தார்கள்; கிராமங்களைக் கொள்ளையடித்து தீ வைத்து கொளுத்துகிறார்கள். நிற்க.

காஷ்மீரின் பூகோள அமைப்பு எவ்வாறுள் ளது; சீனா, ரஷ்யா, ஆப்கானிஸ்தான் ஆகிய நாடுகளின் எல்லைப்புறத்தில் அமைந் துள்ளது. ஆகவே, இச் சமஸ்தானத்தினுண் டாகும். சில்லரைத்தகாறுகளையும் பயன் படுத்திக் கொண்டு, இந்தியாவில் செல்வாக் கடைய மேலே குறிப்பிட்ட அன்னியதேசங் கள் முயலலாம். எனவே, நாம் கோட்டை விட்டுவிடக்கூடாது. காஷ்மீரின் பாதுகாப்பு இந்தியாவின் பாதுகாப்பு. இதை நன்குணர்ந்த இந்திய அரசாங்கம் தனது படைகளை அனுப்பி கலகத்தை அடக்கச் செய்துள்ளது. இதுகண்டு பாகிஸ்தான்வாலாக்கள் பதறு கின்றனர். முஸ்லிம் நாடுகளுக்கு எதிராக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் நடவடிக்கை யென இதை வர்ணிக்கின்றனர். இன்னும் ஏதேதோ அவர்கள் சொல்லுவார்கள். ஏன், அவர்கள்தான், காலில்லாமல், தலையில்லாமல் கதை கட்டிவிடுவதில் சமர்த்தர்களாச்சே.

இது சம்பந்தமாக மவுண்ட்பாட்டனும், ஜின்னாவும் சந்தித்துப் பேசுகிறார்கள். முடிவு என்னவாகுமோ தெரியாது. ஆனால் ஒன்று நிச்சயம். இதன்மூலம் ஜின்னாவின் குறும்பு களுக்கு ஒருவாறு முடிவுகட்டிவிடலாம். நிற்க, இதுமாதிரி அசம்பாவிதமான நிகழ்ச்சி கள் உண்டாவதற்கு காரணமென்ன? பிரிட் டிஷாரின் திட்டம் செய்யும் தீவினையல்லவா இது? சிந்து மாகாணம் பாகிஸ்தானுக்குரியது என்று சொல்லியதுபோல, ஜுனாகாத்இந்திய யூனியனில் சேரவேண்டும் என சொல்லியிருக் கலாம். இல்லையேல், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் பொதுஜன வாக்கெடுத்து அம்மாகாணம் பாகிஸ்தானில் சேரவேண்டு மென முடிவுகட்டிய நாளன்றே, ஜுனாகாத், காஷ்மீர் சமஸ்தானங்களிலும், பொதுஜன வாக்கெடுத்து தகாறுகள் உண்டாகாமல் செய்திருக்கலாம். ஆனால் வேண்டுமென்றே தகாறை கிளப்பிவிட்டுவிட்டார்கள். நாடு குழம்பி நிலை தடுமாறுகிறது.

சரி! நடந்தது நடந்துவிட்டது. இனி இக் குழப்படி தீர வழி என்ன என்று சிந்திப் பதே நமது அடுத்த வேலை. பஞ்சாப், வங்கம், வடமேற்கு எல்லைப்புறம், சிந்து மாகாணங் களில் நிலைமை கட்டுக்கடங்கியுள்ளது. மீண்டும் கலகம் தோன்றுமானால், ஜனப்பரி வர்த்தனைமூலம் நிலைமையை சமாளித்துவிட லாம். ஆனால், இச்சமஸ்தானங்களின் பிரச்னையைத் தீர்ப்பதில்தான் நமது விவேகம் பயன்படவேண்டும். இந்திய, பாகிஸ்தான் அரசாங்கங்கள் நிரந்தர பகைமைகொண்டு போரிட்டு, அழிவதற்கான சந்தர்ப்பங்களை, இச்சமஸ்தான பிரச்னை உண்டாக்குமென நிச்சயமாகக் கூறலாம். எனவே, இதற்கு உடனடியாக முடிவுகட்டவேண்டும். இதை எப்படிச் செய்வது? இதுவரையில் எந்த யூனி யனிலும் சேராதிருக்கும் சமஸ்தானங்களும், பொதுஜன அபிப்பிராயத்திற்கு விரோதமாக ஏதாவதொரு அரசாங்கத்தில் தமது நோக்கம் போல் சேர்ந்துகொண்டுள்ள சமஸ்தானாதிபதி களும், சேர்ந்துகொள்ளவேண்டிய அரசாங் கம் எது என்பது திட்டவட்டமாக முடிவு செய்யப்படவேண்டும். அம்முடிவை ஏற்றுக் கொள்ளாத எவரும் தேசத்துரோகியாவார் என பிரகடனம் செய்யப்படவேண்டும். பின்னர்தான் சாந்தமும், சந்துஷ்டியும் நிலவும் இந்தியாவைக் காணமுடியும். பிரிட் டிஷார் வைத்த தீ அணைந்து கருகும்.

ஜே ஹிந்த்!

# சங்கப் பலகை



பலாக அதிதிகளில் இவர்ஒரு புதுரகம். ஆடம்பரமான பட்டத்தையோ பதவியையோ எதையும் எட்டிப் பிடித்தவரல்ல கண்ணால் காண்பவற்றை கற்பனையில் கரைத்து விடாமல், நாட்டிற்தும்மக்களுக்தும்அப்படியே பிரயோஜனப்படும்படி நவ நவமான சிருஷ்டிகளை உண்டாக்கி நம்மிடையே நடமாட விடும் அதிசய சிற்பி இவர். ஒரு நாவலாசிரியர்!



அதிதி—6

சென்னையில் பிறந்தவர். வயது 41. மிஷன் பள்ளியொன்றில் கல்வி கற்றார். 14வயதிற்கு மேல் குடும்பத்துடன் மைசூருக்குச்சென்று, சரித்திரம், பொருளாதாரப் பாடங்களை எடுத்துக் கொண்டு பி. ஏ. பாஸ் செய்தார். இளவயதிலிருந்தே தன்னைச் சுற்றிலும் பரந்து கிடக்கும் உலகத்தையும், அதிலே வாழ்க்கைப் போராட்டத்திலீடு பட்டுத் தவிக்கும் "மனிதக் கூட்டத்தையும்" தினந் தினே பார்த்து பெருமூச்சுவிடுவார். பள்ளி வாழ்க்கை, தாம்பாத்திய பந்தம், வாழ்க்கையின் மேடு பள்ளங்கள், சுதந்திர தாகம் முதலிய பல கோணங்களிலும் நின்று உலகைப் பார்த்து அவற்றை அப்படியே கதா ரூபமாக சிருஷ்டிக்க அவாக்கொண்டவர்.

இவருடைய சிந்தனை ஓவியங்கள் பலவற்றில் தென்னிந்தியாவின், முக்கியமாக தமிழகத்தின் நிஜ வாழ்க்கையை பிரதிபலிக்க முயன்றிருக்கிறார். அதற்கு ஒரு உதாரணம் "சுவாமியும் சிநேகிதர்களும்" என்ற இவரின் முதல் புத்தகம். 1935-ல் இது பிரசுரிக்கப்பட்டது. இதை எழுதியபோது வயது 29.

ஒரு தனி ரக தத்துவ ஞானி. வாழ்க்கையைப் படம் பிடித்து, வாசகரின் மனதிலே சிரஞ்சீவி சித்திரமாகத் தன் பாத்திரங்களை வாழவைப்பதில் சமர்த்தர். பழமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலம். கல்லூரி வாழ்க்கையை "ஒரு வீணான அறிவு முயற்சி" என்று கூறி நகைப்பவர். தேசியப் பித்து. கவிதை, ஓவியம், இசை, இயற்கைக் காட்சி இவற்றின்மேல் வற்றாக் காதல்.

எழுத்துலகுக்கு நல்ல சேவை புரிந்திருக்கிறார்; புரிந்துவருகிறார். ஒவ்வொரு நவீனமும் ஒவ்வொரு தனி ரகம்; தனி அமைப்பு. அவ்வளவிலும் தென்னிந்திய நடமாடும் சித்திரங்களின் எதிரொலி கேளாமலிரா. "ஆங்கில உபாத்தியாயர்" என்ற நாவலில் தனது வாழ்க்கையையே படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். அதிலே இவரது அருமை மனைவி இறந்ததினாலுண்டான துக்க ரேகைகளின் நெளிவை லேசாக நாம் காண்கிறோம்; உணர்கிறோம். 'சாவை'ப்பற்றிய அவரது மன அலைகளைப் பார்த்து அப்படியே பிரமிக்கிறோம்!

இவரது சிருஷ்டிகளிலேயே திறமையானதும், அபூர்வமானதும், படிக்கப்படிக்க இதய எழுச்சி ஊட்டக்கூடியதுமான 'இருட்டறை' என்ற இவரது மூன்றாவது நாவலைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். அதிலே புரட்சி நாவலாசிரியர் இப்சனின் மேநாட்டு வாழ்க்கைப் பிரதிபலிப்பிற்கும், கீழ்நாட்டு வாழ்க்கை முறைக்குமுள்ள நுணுக்கமான வேற்றுமைகளைத் தெளிவாகக் காணமுடிகிறது. "ஒரு பொம்மை வீடு" ('பொம்மையா? மனைவியா?') என்ற இப்சனின் நாவலிலே வரும் தத்ரூப, கதா பாத்திரம்,—வாழ்க்கைப் புயலை தைரியமாக தான் ஒருவளாகவே நின்று எதிர்க்கும் நெஞ்சுறுதி பூண்ட பெண் தேவதையான 'நோரா' குழந்தைகளையும், கணவனையும் துறந்து அகண்ட ஒரு வெளியை நோக்கிச் செல்கிறாள். ஆனால், கீழ்நாட்டு நாகரீகப் பிரதிபலிப்பின் சின்னமான "இருட்டறை"யில் வரும் துணிவுள்ள கதாபாத்திரமான

"சாவித்திரி"யின் வழியே வேறு விதமாயிருக்கிறது. "இந்த உலகில் எனக்குச் சொந்தமென்று எதுவுமே இல்லை தனது உடலைத்த தவிர, 'தன்னுடையது' என்று ஒரு பெண் சொல்லிக் கொள்ள என்ன இருக்கிறது? அவளிட முள்ளவை ஒன்று, அவளின் தந்தைக்குச் சொந்தமாயிருக்கும்; அல்லது அவளின் கணவனுக்குச் சொந்த மா யி ரு க் கும்' என்று விண்ணதிர கூறி விட்டு வீட்டைத் திறந்து செல்கிருள். நீண்டநாள் அப்படியேயிருக்க முடியவில்லை. "எனது கு ழ ந் தை களையும். இல்லத்தையும் விட்டு விட்டு விலகியிருக்க முடியவில்லையே!" என்று அலறி, பின்னர் ஓடிவருகிருள். இதுதான் தாயுள்ளம்' இது தான் இந்தியப் பண்பு. அதை அப்படியே சித்தரித்துக் காட்டுவதில் வெற்றியடைந்துவிட்டார், நம் அதிதி.

இந்தியாவின் புகழை வெளிநாட்டாரும் மதிக்கும்படி செய்துவரும் தென்னிந்திய எழுத்தாள மாணிக்கங்களில் ஒரு வ ரா கி ய இவரின் பெயர் இதுதான்:

திரு. ஆர். கே. நாராயணன்.

"சாது"

சுதந்திர தீபாவளியில் அனைவருக்கும்

## எமது மங்கள வாழ்த்துகள்!

# அருணாவின் அற்புத சிருஷ்டி

எமது கம்பெனியில் நம்பகமான விலையில் பெரியவர்கள், குழந்தைகள், பெண்மணிகளுக்குத் தேவையான புது மாதிரியான சைக்கிள்கள் ஸ்பேர்பாட்ஸ் எலெக்ட்ரிக் சாமான்கள் மலிவான விலையில் கிடைக்கும்.

உறுதியானவைகள் என்று கியாரண்டி செய்கிறோம்.

## N. பழனிசாமி செட்டியார்,

**அருணா சைக்கிள் மார்ட்,**

வெரைட்டி ஹால் ரோடு, கோயமுத்தூர்.

---

**சுதந்திர தீபாவளி வாழ்த்துக்கள்!**




## எமது வீனஸ்

இங்க்
கோகனெட் ஆயில்
ஸ்னோ
போமேட்

உபயோகிக்கும் அன்பர்களனைவருக்கும் வாழ்த்துக்கள்.

இந்திய கைத் தொழிலை ஆதரியுங்கள்

**வீனஸ் இண்டஸ்டிரியல்ஒர்க்ஸ்,**

14, பந்தடி 1-வது தெரு, மதுரை.

## 'பல்டி'யடிக்கும் நிஜாமின் பரிதவிப்பு



# ரத்த வெள்ளத்தில்

ம. முத்துகிருஷ்ணன்.

மைசூரிலே சுதந்திர தீபாவளி கொண்டாடப்படுகிறது. முன்னெப்பொழுதையும்விட குதூகலமாகவும், மன நிறைவோடும், 'நாமிருக்கும் நாடு நமதென்பதறிந்தோம்' என்ற உணர்ச்சியோடும் மைசூர் மக்கள் இன்று எழுப்பும் தீபாவளிக் கொண்டாட்டக் குரலோசை வான மண்டலத்திலே எதிரொலிக்கிறது. 'பொறுப் பாட்சி பெற்று விட்டோம்'; 'மக்களின் பிரதிநிதிகள் மன்றத்திலமர்ந்து விட்டனர்' என்ற மகிழ்ச்சியால் மைசூர் தொழிலாளி, விவசாயி, ஏழை, எளியவர்கள் தம் சக்திக்கேற்ப விண் அதிர கிளப்பும் வாண வேடிகளின் ஒலி நமது செவிகளிலே கேட்கிறது.



*நரகாசுரன் அன்று ஒழிந்தான். அதுகூட அவ்வளவு ஆச்சர்யமும், பிரமாதமும் அல்லென்று சொல்லும்படி மக்கள் ஆணவமும், அடிமைத்தளையும், பிற்போக்கும் படைத்த யதேச்சாதிகார அரக்கனைத் தொலைத்து தலை முழுகிய இந்த 'பொறுப்பாட்சி தீபாவளி'யை மிகவும் குதூகலமாய் கொண்டாடுகின்றனர்.*

இன்னொரு பக்கத்திலே வேறொருவிதமான தீபாவளி! மைசூர் யதேச்சாதிகாரத்தை ஒழித்து, மக்களின் ஆட்சியை அரியாசனத்திலமர்த்த ஆயிரக்கணக்கான தாய்மார்கள் வீரத்திலகமிட்டு தங்கள் அருமைக் குமாரர்களை அனுப்பினர். வீரத் தகப்பன்மார்கள் தங்கள் புதல்வர்களுக்கு வாளும் வேலும் கொடுத்து மார்தட்டி போர்க்களம் நோக்கி விடுத்தனர். தொழிலாளிகளும், விவசாயிகளும், கூட்டம் கூட்டமாய் ஆவேசத்துடன் வீறிட்டெழுந்து சர்வாதிகார மன்னன் அரண்மனையைச் சுற்றி தியாக வேள்விபுரிந்து, அங்கே மக்களின் ஆட்சியை ஸ்தாபிக்க விரைந்தனர்.

*ஜெயத்துடன் நாட்டிற்கும், தங்கள் வாழ்விற்கும் ஒரு விமோசனத்தைக் கொண்டுவா வேண்டுமென்று அவர்களின் மனைவி மக்களெல்லாம் அவர்களை வாழ்த்தி வழியனுப்பி கடவுளைப் பிரார்த்தித்தனர்.*

*மைசூர் சத்தியாக்கிரஹம்,- பொறுப்பாட்சி போர்—சாகஸமான எதிர்ப்பு இவற்றின் மூலம் ரணகளத்திலே புகுந்துவிட்ட பொறுப்பாட்சிப் போராட்ட வீரர்கள் சென்ற, அந்த வழிமேல் விழி வைத்து கால் கடுக்க, கண் நோக எதிர்பார்த்துக்கொண்டிருந்தும் அவர்களில் சிலர் இன்னும் திரும்பி வரவில்லை. இதனால் மனம் கருகிய தாய், தந்தை, மனைவி, மக்களெல்லாம் தங்கள்*

# எழுந்தது புரட்சி;

# பொறுப்பாட்சி!

உறவினர் எங்கே எங்கேஎன்று கதறி சுடலையைப் பார்க்கின்றனர். அங்கே தீ பற்றி எரிகிறது. பொறுப்பாட்சிப் போராட்டத்திலே போலீஸ்காரரால் சுடப்பட்டு, காயப்படுத்தப்பட்டு மரண தேவதையிடம் சரண் புகுந்த வீரர்களின் உடலிலே தான் தீ பற்றி எரிகிறது! தீபாவளியின் தீப ஒளிகளினூடே. உறவினர்களைப் பறிகொடுத்தவர்களின் கண்களிலிருந்து மாலை மாலையாக இரத்தச் சிவப்பேறிய கன்னத்தைக் கீறிக்கொண்டு வடியும் கண்ணீர் ஊற்றிலே, அந்த மயான ஜ்வாலை ஒளி பிரதிபலித்து ஒரே தீ மயமாக அனல் வீசுகிறது.

*　　*

மக்களின் துயரக் குரலொலி ஒரு பக்கம் பொறுப்பாட்சி பெற்ற மகிழ்ச்சியில் சுதந்திர தீபாவளிக் கொண்டாட்டம் மறுபக்கம். அரண்மனையி லிருந்து, ஆண்டி குடில் வரைக்கும் தீப, வாணவேடிக்கைகள். தொழிற்சாலைகளிலும், விவசாயப் பண்ணைகளிலும் சுதந்திரத் தீபாவளியின் சாயல்.



இப்படி இன்று தீபாவளியை அனுபவிக்கும் மைசூரிலே கொஞ்ச நாட்களுக்கு முன்னால் வேறொரு 'தீபாவளி' நடந்தது.

அந்தத் தீபாவளியில் மக்கள் கலந்து கொண்டனர். அவர்களுக்கு எதிரிடையாக போலீஸும், மைசூர் அரசாங்க அதிகாரவர்க்கமும் அதிலே ஈடுபட்டன.

பொதுமக்கள் உள்ளங்களிலே அகோரமாக தீ பற்றி எரிந்தது! 'பொறுப்பாட்சி பெறுமல் ஒரு நிமிடமும் வாழமாட்டோம்' என்ற அவர்களின் இதய தாபத்தை அவித்துவிட யதேச்சாதிகார வர்க்கம் இயன்றளவு முயன்று பார்த்தது. பலன் மக்களின் கோபாவேசக்கனல்!

மைசூர் ரயில்வே தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். அதற்குப் பதில் நடவடிக்கையாக, மிருகத்தனமாக அதிகார வர்க்கம் ரேஷன் பொருள்களைக் கொடுக்காமல் அவர்களின் அடிவயிற்றிலே அடித்தது!

சத்தியாக்கிரஹிகளின் பேச்சு சுதந்திரம் பறிக்கப்பட்டு, அவர்களை காராக்கிரஹத்தில் விட்டு வதைத்தனர். மைசூருக்கு வெளியிலிருந்து கோஷ்டி கோஷ்டியாக போராடும் தியாகிகளின் இலட்சியசாதனைக்காக திரண்டு வந்தனர், இந்திய மக்கள். அவர்களுக்கும் அதே சித்ரவதை!

செப்டம்பர் 28-ந் தேதி "சுதந்திரம்எமது பிறப்புரிமை" என்று மார்தட்டி 'மைசூர் இரும்பு, எஃகு தொழிற்சாலை'யின்மேல் இந்திய சுதந்திரக் கொடியை ஏற்றுவிக்க தொழிலாளர்களும் பொதுமக்களும் முயன்றபோது அரக்க வெறியும் பின்னடையும்படி போலீஸார் 'லத்தி'யால் அடித்தும், துப்பாக்கியால் சுட்டும் படுகொலை புரிந்தனர். ஒரு பாவமும் அறியாது கொடிவணக்கத்திற்குக் கைகூப்பிய கந்தப்பா, சித்தா, வின்ஸென்ட் ஆகிய இளைஞர்கள் படுகாயமுற்றனர். மூர்ச்சையுற்று குருதி அருவியால் புவியைக் கழுவிக்கொண்டிருந்த பலர் ஷிமோகா ஆஸ்பத்திரியில் அள்ளி எறியப்பட்டனர்.

# எரிந்தது முடியாட்சி!

"பத்ராவதி"யில் நடந்த துப்பாக்கிப்பிரயோகத்தில், ஸ்தல போலீஸார் செய்த அட்டூழியமும் அட்டகாசமும் சொல்லொணாதது. இதைக் கண்டித்து 29-ந்தேதி மைசூர் தெருக்களிலே துக்க ஊர்வலங்களும், கடை அடைப்பும் இருந்ததைக் கண்ணுற்ற எவரும் இரத்தக் கண்ணீர் வடிக்காமலிருந்திருக்கமாட்டார்கள்.

பள்ளிகள் மூடப்பட்டுக்கிடந்தன; உபாத்தியாயர்களில் பலர் சிறையிலே அடைபட்டுக் கிடந்தனர்.

பொறுப்பாட்சிப் போராட்ட இயக்கத்தின் வேகம் அலையலையாக மோதியதன் கடுமையைத் தாங்க இயலாத மைசூர் போலீஸ் வர்க்கம், மூளை குழம்பிப்போய் விட்டது. ஞாயிற்றுக்கிழமை மாலையில் ஹாஸன் என்னும் ஊரிலுள்ள வஸந்தா கபேக்கு எதிரில் ரேடியோச் செய்தியைக் கேட்பதற்காகக் கூடியிருந்த கூட்டத்தினரை அநாகரீகமாக போலீஸார் 'லத்தி'கொண்டு அடித்த சம்பவமே இதற்கோர்உதாரணம்.

இதற்கு சற்று முன்னால் ரிசர்வ் போலீஸ் கோஷ்டியொன்று யாதொரு முன்னெச்சரிக்கையுமின்றி வஸந்தா கபேக்குள் புகுந்து அங்கு காபி சாப்பிட்டுக்கொண்டிருந்தவர்களேயும்,பணப்பெட்டியருகிலமர்ந்திருந்த 'காஷியர்' பாஸ்கரனையும் மனம்போன போக்காய் அடித்து நொறுக்கினர். அதுமட்டுமா? பாஸ்கரனின் உடைகள் கிழிக்கப்பட்டன. உடம்பெல்லாம் இரத்த வெள்ளம். மண்டை பிளக்கப்பட்டு படுகாயமுற்றார். மேலும் அந்த 'ரிசர்வ் குண்டர்கள்' பணப்பெட்டியருகில் சென்று ரூ. 400 வரை கொள்ளையடித்தனர். போகிற போக்கிலே மேஜை, நாற்காலி, கண்ணாடி, பாத்திரங்கள் யாவற்றையும் நாசம் செய்தனர். சில போலீஸ்காரர்கள் காந்தி பஜாரைச் சுற்றி வளைத்துக்கொண்டு, அரசியல் விவகாரம் ஏதுமறியா ஏழை மக்களை தடி கொண்டு தாக்கினர்.



கொள்ளையும் கொள்ளியும் கொழுந்துவிட்டெரிந்த அந்த பயங்கர 'தீபாவளி' வெறியாட்டம், பச்சிளம் பாலகர்களையும் தாய்மார்களையும், மெல்லிய தன்மைபடைத்த இளம் பெண்களையும் கொடூரமாக பாதித்தது. பெண்கள் பலர் கைதிகளாகி சிறைச்சாலைகளுக்குள் தள்ளப்பட்டனர். சிலருக்குத் தடியடிப்பிரயோகம்!

வியாபாரிகளும், மாணவர்களும், நாசிர் அகமத் ஷரீப் போன்ற சில முஸ்லிம்களும் இந்த 'தீபாவளி'யின் உக்ரத்திற்கு ஆளானவர்கள். சந்தன மரங்கள் நிறைந்து மணம் வீசும் மைசூர், ஒரு பிணக்காடாய் அப்போது காட்சியளித்தது என்றால் மிகையாகாது.

* * *

மனதாலும் எண்ணிப் பார்க்க முடியாத அளவிற்கு கொடுமைக்கு இரையான மக்கள் கடைசிவரை ஒரே கொள்கை, ஒரேவைராக்கியத்திலிருந்ததால் அன்றுநடந்த 'தீபாவளி' தீயின்வெப்பம் தணிந்து இன்று பொறுப்பாட்சியளிக்கும் புனிதத் தீபாவளி கிடைத்திருக்கிறது.

மைசூர் சமஸ்தான மக்களின் கட்டுப்பாடும், தியாகமும், அவர்களுக்கு பொறுப்பாட்சி பாதையை செப்பனிட்டு விட்டன. மக்களின் பிரதிநிதிகள் அரசாங்க யந்திரத்தை இனிமேல் இயக்கப் போகின்றனர். புதிய மைசூரின் 'காபினெட்' அக்டோபர் 31-ம் தேதியிலிருந்து தனது வேலையைத் துவக்கப்போகிறது. திருவாளர்கள் பி. சுப்பாராமா; டி. எச். சந்திரசேகரய்யா; முகமது ஷரீப்; எம். எச். சித்தையா போன்ற மக்களின் பிரதிநிதிகள் மந்திரிகளாகின்றனர்.

இந்த நிலைமைக்கு சர்வாதிகார மன்னராட்சியின் கீழ் நசுக்குண்டிருந்த சமஸ்தானத்தை புதியதொரு சகாப்தத்திற்கு குறுகிய காலத்திற்குள் இழுத்துச்சென்ற பொதுமக்களின்

# வாழ்க மைசூர் தியாகிகள் நாமம்!

தியாகமும், உயிர்ப்பலியும் என்றென்றும் மைசூர் சரித்திரத்தின் பொன்னேடுகளில் பொறிக்கப்பட்டிருக்கும்.

கட்டுரையின் மத்தியிலுள்ள மூன்று படங்களையும் பாருங்கள். அவற்றைக் கண்ணுறும் ஒவ்வொரு இந்திய உள்ளத்திலும் ரத்த ஊற்றே பீறிடும்!

பெங்களூர் தண்டில் செப்டம்பர் மாதம் 8-ம் தேதி நடந்த போலீஸாரின் மிருக வெறியாட்டத்தின் ஒரு சிதர் அவை! சர்வாதிகார மன்னராட்சியின் துப்பாக்கிக்கு ஒரு இரை! கையிலே அதிகாரமிருக்கிறதென்று காட்டுமிராண்டிகளாகமாறிய கலெக்டர்'புட்டு ரெங்கசாமி', போலீஸ் கமிஷனர் பாபுவின் பேயாட்ட நர்த்தனத்திற்கு ஒரு பலி!

15 வயதுள்ள ராஜு, 16 வயதுள்ள அன்னையா, 20 வயதுள்ள மதுரை முத்து ஆகிய இந்த மூவரும் மைசூர் மக்களின் சுபிட்சவாழ்விற்காக தங்களையே சுதந்திர தேவியின் பலி பீடத்தில் அர்ப்பணித்து விட்ட பல்லாயிரம் இளம் காளைகளில் ஒரு பகுதியினர்.

இவர்கள் போன்ற பலரின் இரத்த வெள்ளத்திலேதான் இன்றைய 'மைசூர் பொறுப்பாட்சி மலர்' மலர்ந்திருக்கிறது என்பதை ஒவ்வொரு மைசூர்க்காரரும் மனதிலே கொள்ளவேண்டும்.

இந்தப்புனித தீபாவளி தினத்தில், அந்த தன்னலமற்ற தியாகிகளுக்கு வணக்கம் செலுத்த வேண்டும். அவர்கள் பலியான இடங்களிலே நிரந்தர சின்னங்களெழுப்பி அவற்றிக்கு இதயாஞ்சலி செய்ய வேண்டும். அப்பொழுது தான் மைசூர் மக்கள் கொண்டாடும் "சுதந்திர தீபாவளியிலும்" ஒரு அர்த்தமிருக்கும்.

# விலங்கொடித்த வீரர்கள்



பணம், பட்டம், பதவிகளைத் துச்சமெனக் கருதி, பிறந்த மணித்திரு நாட்டின் பணிக்கு வாழ்க்கையை அர்ப்பணித்த மாசற்ற தொண்டர்களில் ஒருவரானதோழர் எம். எஸ். முனிசாமி, மதுரையில் பிறந்தவர். காந்தியடிகளின் தலைமையில் காங்கிரஸ் மகாசபை நடத்திய பல போராட்டங்களிலும் ஆடம்பரமோ விளம்பரமோ இல்லாமல் தொண்டாற்றி, அதன் பயனாக அதிகார வர்க்கத்தின் கோபத் தாக்குதல்களுக்கு பல தடவைகளிலும், இலக்கானவர்.

1930, 32-ம் வருஷங்களில் நடைபெற்ற சுதந்திரப் போராட்டங்களில் மதுரை நகரிலும், சுற்றுப்புற பிரதேசங்களிலும் தேசீய இயக்கத்தை வலுவடையச் செய்ய இளைஞர்களைத் திரட்டி ஏற்பாடு செய்த சமயங்களில் போலீஸாரின் அடிகளுக்கும், அதைத் தொடர்ந்து சிறைவாசங்களுக்கும் இவர் ஆளானார். 1942 ல் நடைபெற்ற விடுதலைப் போரின்போது, அரசாங்கம் அவரை சிறையில் காவல் கைதியாக அடைத்து வைத்துவிட்டது.

இளம்பிராயமுதல் இன்றளவும் சுயநலம்பாராது சேவை செய்துவரும் இவ்விளைஞருக்கு திண்டுக்கல் சுதந்திர விழாக் கமிட்டி ரூ. 1111—1—1 கொண்ட பண முடிப்பை அன்பளிப்பாக காந்தி ஜயந்தியன்று (2-10-47) அளித்தது. ஆனால் இவர் தனக்களிக்கப்பட்ட இப்பணத்தை இரண்டு பங்காகப் பகிர்ந்து அன்னை கஸ்தூரிபாய் நிதிக்காக ரூ. 500ஐ யும் பம்பாய் மாகாண பிரதம மந்திரி பி. ஜி. கேரிடம் கொடுத்துவிட்டார் மீதி ரூ. 611-1-1ஐ எட்டயபுரத்தில் நடந்த பாரதி மண்டபத் திறப்புவிழா சமயத்தில் வங்காள கவர்னர் ச. ராஜகோபாலாச்சாரியாரிடம் பாரதி ஞாபகார்த்த நிதிக்கு அளித்திருக்கிறார்.



நீண்டநாள் தியாகியான தோழர் முனிசாமி வருங்காலத்தில் சமதர்ம சமுதாய அமைப்புக்காக உழைப்பார் என நாடு எதிர்பார்க்கிறது. அரசியல் அரங்கில் இவரைப்போல சலியா உள்ளம் படைத்த வீரர்களின் தியாகத்தில் தான் சமதர்ம சமுதாயம் உருவாகும்.

---

குறிப்பு:— "தமிழ்நாடு" பத்திரிகையில் 'விலங்கொடித்த வீரர்கள்' என்ற தலைப்பில் பிரசுரிக்கும்படி, சிலர் தம் வாழ்க்கைச் சரிதங்களை மாத்திரம் அனுப்பிவிட்டு, புகைப்படம் அனுப்பாது விட்டுவிடுகிறார்கள். புகைப்படமின்றி வாழ்க்கை விவரம் மாத்திரம் பத்திரிகையில் பிரசுரிக்கப்படமாட்டாது.

—ஆசிரியர்



# இதுவா விடுதலை?

அ. சுருளியாண்டிப்பாவலர்.



வெள்ளையர் ஆட்சி நீங்கி
விடுதலை யுற்றோம்; இன்னும்
கள்ளிலும் பேதா பேதக்
கருத்திலும் மீண்டோ மில்லை;
கொள்ளை லாபத்தை நாடும்
கொடியவர் துன்பம் நீங்கி
உள்ளரும் உண்மையான
விடுதலை உறும் நாளென்றோ?

சாதி பேதங்க ளென்னும்
விலங்கினைத் தகாத்தோமில்லை;
சமய வாதங்க ளென்னும்
சச்சர வோய வில்லை;
மாதரை உயர்வா யெண்ணும்
மதி நமக்கின்னம் வல்லை;
ஏதடா! இவைக ளில்லா
விடுதலை இதமு மாமோ?

பணத்திமிர் படைத்த பேரின்
படாடோபம்-நீங்கவில்லை;
பாட்டாளி மக்களுக்குப்
பசி தீர உணவுமில்லை;
கணத்திலே இவற்றைக் கல்லக்
கங்கணம் பூண்போம் வாரீர்!
மனத்திலே உறுதி வந்தால்
மறுகணம் மீட்சி யன்றோ?

படிதனில் தமிழ்த் தாயின்னம்
பழம் புகழ் பெற்றாளில்லை;
கொடுமைகள் யாவும் நீங்கி
விடுதலை கூடவில்லை;
விடுதலை என்ற பேச்சில்
மேவுமோ மெய்ம்மை இன்பம்?
விடுதலை என்று லஃது
அனைத்தினும் மீட்சி யன்றோ?

## அது என்ன மார்ஷல் திட்டம்?

(35-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்கெல்லாம் அமெரிக்கர் கையாளும் 'ஏப்பக்கொள்கை'யை ஐரோப்பா முழுதும் பாவவிட்டு, அதே சமயம் மேற்குப்பகுதியிலே ஒரு ரஷ்ய எதிர்ப்பு அணியை சிருஷ்டிக்க முயலும் விஷ வித்துக்களைக் கொண்டிருக்கிறது 'மார்ஷல் திட்டம்'. தனது பிரிட்டிஷ் பகுதிகளிலுள்ள ஜெர்மானிய பிரதேசங்களை ஒரு பலம் பொருந்திய அமெரிக்க ராணுவ தளமாக மாற்றும் எண்ணமும் உண்டு.

இத்துடன் ரூர் பிரதேசத்தை பிரிட்டன் வசமிருந்து பிடுங்கி, அங்கே 300 மில்லியன் டாலர்களைக் கடனுக்கக்கொடுத்து அமெரிக்க நிபுணர்களைக்கொண்டு சீர்திருத்தம் செய்யவும் திட்டமிட்டிருக்கிறது அமெரிக்கா! அமெரிக்காவின் இந்தபேராசைஒருபுறமிருக்க, இதை வன்மையாக எதிர்க்கும் சக்திகளும் வேகமாக உருவாகிக்கொண்டு வருகின்றன.

★ 'ரூரி'லிருந்து பிரிட்டனை வெளியேற்ற முயலுவதால் பிரிட்டனும்; தனது பாதுகாப்பிற்கு ஆபத்து வருமோ என்ற அஞ்சுவதால் பிரான்ஸும், அமெரிக்காவின்மேல்அதிருப்தி கொள்கின்றன.

★ ரஷ்யா, ஏற்கனவேயே பகிரங்கமாக அமெரிக்காவின் 'மார்ஷல் திட்டம்' ஆதிக்க வெறியின் உச்சம் என்று உலக மேடையில் கண்டித்திருக்கிறது. இந்தத் திட்டத்தைத் தடுக்க ஒரு யுத்தத்திலேயே ரஷ்யா இறங்குமேயானாலும் அது ஆச்சர்யமல்ல!

ரஷ்யாவின் வெளி நாட்டுக் கொள்கைகள் ஐரோப்பியகீழ்திசை நாடுகள் சிலவற்றிற்குப் பிடித்திருக்கின்றன. இதையுணர்ந்தஅமெரிக்கா, அந்தந்த நாடுகளின் பிற்போக்கு கும்பல்களைக் கொண்டு, பழைய உளுத்துப்போன அரசாங்கங்களை அமைக்க முயலுகிறது. இதையுணர்ந்த அந்த நாடுகளின் தொழிலாள வர்க்கம்-முற்போக்கு சக்திகள் யாவும், ஆபத்தான மார்ஷல் திட்டத்தை எதிர்ப்பதன் மூலம் அமெரிக்கத் தலையீட்டை ஐரோப்பாவிலிருந்தே ஒழிக்க முற்பட்டு விட்டன. இந்த எதிர்ப்புகளுக்கு ஆதரவாக ஒரு சில முற்போக்கு கோஷ்டிகள் அமெரிக்காவிலேயே கிளம்பியுள்ளன.

★ ★ ★ சர்வ தேச சூழ்நிலையில் பார்க்கும்போது, அமெரிக்காவின் 'மார்ஷல் திட்டம்' பலிக்காது என்றே தோன்றுகிறது. ஒரு வேளை அமெரிக்கா வலுக்கட்டாயமாக ஐரோப்பாவில் திணிக்குமாயின், அதுவே "மூன்றாம் மகா யுத்தத்தின்" முதல் வெடியாக மாறிவிடுமென்பதில் சந்தேகமேஇல்லை.

# அது என்ன மார்ஷல் திட்டம்?

மமுகி

ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுததற்கும், மேற்கு ஐரோப்பிய நாடுகள் கஷ்டப்படுகிறதற்கு தற்போது அமெரிக்கா உதவ முன்வருவதற்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. லோகோபகாரி என்று தன்னை பறையறைவித்துக்கொண்டு, பின்புறமாய் தன் சுயநலத்திற்கே அமெரிக்கா வழி செய்துகொள்வது அதன் பிறவிக்குணம். உலக ராஜதந்திரிகள், அரசியல் அறிஞர்கள், வல்லரசு முக்கியஸ்தர்கள் ஆகிய எல்லோருடைய மூளையையும் குழப்பிவிட்டு, ஐரோப்பிய நாடுகளிடையே பிரமாதமான வாதப் பிரதிவாதங்களை உக்ரமாகக் கிளப்பிவிட்டிருக்கிறது 'மார்ஷல் திட்டம்' என்ற அமெரிக்க மாய்மாலம்!

'மார்ஷல் திட்டம்' என்றால் என்ன? அதன் முக்கிய நோக்கமென்ன? அது கொண்டுவரப்பட்டதன் காரணமென்ன? என்பவற்றை ஆதிக்க வெறியற்ற, நியாய உள்ளம் படைத்த ஒவ்வொருவரும் அறிந்துகொள்ள ஆவல் கொள்வது இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் மிகவும் பொருத்தமானது.

இரண்டாம் மகாயுத்தம் முடிந்தது. ஐரோப்பிய நாடுகளெல்லாம் அதிகம் பாதிக்கப்பட்டன. இயற்கை வளங்கள் அழிந்தன. வயல் வெளிகள் தீய்ந்தன. கைத்தொழில் சிதைந்தது. தொழிலாள சமுதாயம் உருக்குலைந்தது. உற்பத்தி சாதனம்-சக்தி யாவும் முறிந்தன. பஞ்சமும், பட்டினியும் குடி புகுந்தன. இவ்வளவு கஷ்டங்களிலிருந்தும் விடுபட முடியாமல் ஐரோப்பா திணறியது.

இந்த நிலையில் வல்லரசுகள் போட்டியிட்டு ஐரோப்பாவைக் கூறு போட்டுக்கொண்டு மேலும் கஷ்டத்தையளித்தன. வறுமையிலும், உற்பத்திக் குறைவிலும் பஞ்சத்திலும் வாடும் ஐரோப்பிய நாடுகளுக்கு பொருளாதார உதவியளித்து, அவற்றைப் பழைய ஸ்திதிக்குக்கொண்டுவரும் ஒரு அமெரிக்க சூழ்ச்சி இந்த 'மார்ஷல் திட்டம்'.

உண்மையில் ஐரோப்பிய நாடுகளுக்கு பொருளாதார உதவியளிப்பதுதான் அமெரிக்காவின் நோக்கமா? ஐரோப்பாவை சீரும் சிறப்புமுள்ள செல்வம் கொழிக்கும் பூமியாக மாற்றும் பரோபகார சிந்தை அமெரிக்காவிற்கு உண்டா? என்று ஆராய்ந்து பார்த்தால் சிறிதும் கிடையாது என்ற உண்மை புலனாகும். அமெரிக்கா 'மார்ஷல் திட்டத்தை' வெளியிட்டதற்கு வேறு உள் நோக்கமுமுண்டு. அதாவது, மீட்சி நோக்கி துயரப்பட்டுக்கொண்டிருக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கு உதவுகிறோம் என்ற பெயரில், ஒரு ஸ்திரமான பிடிப்பை அங்கே ஏற்படுத்திக் கொள்ளவே விரும்புகிறது.

வல்லரசுகளில் பலமிக்க ஒன்றாகவும், பெரிய விஸ்தீரணத்தைக் கொண்டதாயும் செல்வம் நிறைந்ததாகவும், வெகு தொலைவிலுமுள்ள அமெரிக்கா, ஐரோப்பாவில் அதிகசிரமப்பட்டு தனது பலத்தைப் பெருக்கமுயலுவதற்குப்பலகாரணங்களுண்டு.

முக்கியமாக அமெரிக்காவின் உள்நாட்டு நிலைமை. பணக்கார நாடாக கம்பீரமாக தோற்றமளிக்கும் அமெரிக்காவில் 1948-ம் வருட முடிவிற்குள் ஒரு பெருத்த நெருக்கடி உண்டாகப் போகிறது. அது பொருளாதார நெருக்கடி! இந்த நெருக்கடியை அமெரிக்க அரசாங்கமும், வியாபாரிகளும் நன்கு உணர்ந்தேயிருக்கின்றனர். தங்களை வெகு சீக்கிரத்தில் பாதிக்கவிருக்கும் ஒரு பிரமாதமான பொருளாதார மந்தத்திலிருந்து தற்காத்துக்

கொள்ள, சாத்தியமான சகல முறைகளையும் கையாள்வ தென்று அவர்கள் தீர்மானித்து விட்டனர். அந்த முயற்சியின் சின்னமே இந்த 'மார்ஷல் திட்டம்'. இதிலே இவர்கள் வெற்றி பெற்றுவிட்டால் அப் புறம், எந்த வல்லரசாலும், அமெரிக்காவை அசைக்க முடி யாது. "தன்னிகரற்று உலகின் தலைமைக்கு ஒரே அருகதையான தேசம் அமெரிக்காதான்" என்ற நிலைமை ஏற்பட்டுவிடுமென கனவு காண்கின்றனர்.

யுத்த சமயத்திலிருந்த உற்பத்தி வேகமும், சக்தியும் யுத்த முடிவுக்குப் பின்னர் ஒரேயடியாய் குறைந்து விடவில்லை. தொழிற்சாலை முதலாளிகள் அதிக லாப மடையும் எண்ணத்தில் உற்பத்தி வேகத்தை அப்படியே வைத்திருக்க விரும்பினர். இதன் பலன் பொருள்கள் அமோகமாய் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனல் அதற்கேற்ப தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழி லாளிகளின் கூலி அதிகரிக்கப்படவேயில்லை. இதே நிலைதான் மற்ற வேலைக்காரர்களுக்கும். இதனல் பொது ஜனங்களின் 'வாங்கும் சக்தி' பொருள் விளைச்சலுக்குச் சரியாக உயராமல் தேங்கியது. அதோடு அமெரிக்காவில் கண்ட்ரோல் எடுபட்ட பின்னர் பொருள்களின் விலை, விஷம் போல் ஏறியது. உதாரணத்திற்கு ஒரு பொருளின் மொத்த விற்பனை விலையைப் பாருங்கள்.

**1946**

ஜுலை 113. டிசம்பர் 141

**1947**

பிப்ரவரி 145.
மார்ச் 149.




மக்களின் வருவாய் உயராமல் பழைய நிலையிலேயே யிருக்க, பொருள்கள் தேசத்திலே குவிந்து விட்டன. அமெரிக்காவின் புள்ளி விவரங்களின்படி அதன் சேகரிப்புப் பொருள்களின் மதிப்பு 35,000 மில்லியன் டாலர்களாக உயர்ந்து விட்டது.

பெரிய பெரிய வியாபார கிட்டங்கிகளின் கையிருப்பு சாமான்களிலேயும் மிதமிஞ்சிய தேக்கம்.

**1946** பிப்ரவரியிலிருந்து **1947** பிப்ரவரி வரை:- கையிருப்பில் உயர்வு

57 சதவிகிதம். விற்பனையில் உயர்வு 5 சதவிகிதம்.

வெளிநாடுகளிலிருந்தும் திரும்பி வந்த அமெரிக்க சோல்ஜர்களும், தளபதிகளும், அதிகாரிகளும் சுகமானவாழ்க்கை வசதிகளைத் தேடுகின்றனர். ரம்யமான வீடுகளில் வசிக்க மும்முரமாய் முயலுகின்றனர். ஆனால் வீடு கட்டும் சாமான்களின் விலையோ, ரொம்பவும் அதிகரித்திருப்பதால், நல்ல வீடுகளை அதிகமாகக் கட்டமுடியவில்லை. இதனல் வீட்டுப் பஞ்சம் அதிகரித்திருக்கிறது. வாடகைகளும் பிரமிக்கும் அளவுக்கு உயர்த்தப்பட்டு விட்டன.

இவ்வாறு அமெரிக்காவின் ஒவ்வொரு பொருளாதார முனையிலும் ஏற்பட்டுவரும் நெருக்கடியின் வேகம் நாளுக்குநாள் அதிகரித்துவருகிறது,

இதைத் தடுக்க வேண்டுமானல் அமெரிக்க பொருள்கள் எல்லாம் செலவாணி யாக வேண்டும். உள் நாட்டிலோ இதற்குவழி இல்லை.ஆதலால் ஐரோப்பா போன்ற வீழ்ச்சியுற்ற நாட்டிலே ஒரு அசைக்க முடியாத 'மார்க்கெட்'டை ஏற்படுத்திக் கோள்ளவும், வெளிநாட்டு ஏற்றுமதியை அதிகரித்து, இறக்குமதியை குறைத்துக்கோள்ளவுமே 'மார்ஷல் திட்டம்' முயலுகிறது.

ஜெர்மனியின் கனயந்திரத் தொழிலை யுத்தத்திற்கு முன்னிருந்த நிலைக்குக் கொணரவேண்டுமானல் பிரான்ஸ் வருடத்திற்கு 60 லட்சம் டன் இரும்புமூலப் பொருள்களை 'ரூர்' பிரதேசத்திற்குத் தரவேண்டுமென்று 'மார்ஷல் திட்டம்' வற்புறுத்துகிறது. இதன் முடிவு யாதெனில், ஜெர்மனியின் கைத்தொழிலை, அமெரிக்கப் பிடிப்பில் வைத்துத் திணிப்பதாகவே முடியும்.

பொருளாதார சூழ்ச்சியை செய்வதோடு மட்டுமல்லாமல், அரசியல் நோக்கங்களுக்காகவும், 'மார்ஷல் திட்டம்' பாடுபடுகிறது.

ரஷ்யா நாளுக்கு நாள் புதிய பலத்தோடு, யுகோ, பல்கேரியா, போலந்து, ருமேனியா, உக்ரைன் ஆகிய நாடுகளிடம் தன் செல்வாக்கை அதிகப்படுத்த முயன்றுகொண்டு வருகிறது. ஐரோப்பா முழுவதையும் இந்த ரீதியிலேயே ரஷ்யா விழுங்கிவிடுமுன்னர், அதிகாரத் தராசை சமப்படுத்த அமெரிக்கா துடிக்கிறது.

அந்தரங்கத்தில் ஈரான், கிரீஸ், துருக்கி

(32-ம் பக்கம் பார்க்க)



# பிரிவு

வைபவி

சுந்தரராமனுடைய சோபை சொட்டும் வதனத்திற்காக ஒரு விம்மல்; நொடிவிடாமல் துடி துடிக்கும் அங்க சேஷ்டைகளுக்காக கொஞ்சம் முல்லைச் சிரிபபு; உடனைக்குடன் சுருங்கி விரியும் ஹிருதய பாவத்திற்காகச் சற்றுப் பிரேமை; மதசீய விறு விறுப்பிற்காக ஒரு ஆச்சர்ய விழி விரிப்பு; காதல் இதயத்தைக் குலுக்கி விட்டு, பிறகு தெளிய வைத்து விடும் செயல்களுக்காக ஒரு சிலிர்ப்பு; அன்புகசியும் வார்த்தைப் பிரயோகத்திற்காக ஒரு தீராச் சுகத்தின் சாயை; விளையாட்டுக் குற்றத்தை, விளையாட்டுச் சட்டப்படி விவாதித்து, அதே சட்டப்படி தண்டனைகொடுத்து விட்டு, உடனே கன்னத்தை மிருதுவாக வருடிவிடும் ஸ்பரிசத்திற்காக ஒரு இனிமை; பிறகு அவனுடைய பிரிவிற்காக எண்ண முடியாத கண்ணீர்ச் சொட்டுகள்!

இத்தனை தோற்றங்களும் மாறி மாறி வருகின்றன; வேகவதியைத் தொட்டுத் தட்டுகின்றன; பிறகு மறைந்து விடுகின்றன; இவ்வளவிற்கும் வேகவதி ஒத்துப் போகிறாள்!

அவள், பெண்மை நிரம்பிய ஒரு பெண்; ஆனால் ஆண்மையின் அதீதமான அதட்டலுக்கு மருண்டு பின் வாங்கும் பேதையல்ல.

அவள் சுந்தரராமனுக்குச் சொந்தமாகி எட்டு வருடங்கள் சிட்டாய்ப்பறந்துவிட்டன! அப்பொழுது அவள் எட்டாவது வயதைத் தொட்டுக் கொண்டிருந்தாள்; அவன் பனிரெண்டாவது வயதை விட்டுக் கொண்டிருந்தான்; அந்த நிலையில் இருவரும் ஒட்டினர்; தாமாக அல்ல; பெற்றோரால்.

அந்த ஒட்டலில் அவர்களின் சம்மதம் இல்லாமலில்லை; ஆயினும் ஒட்டலின் தத்துவத்தை விட்டுச் சொல்ல பருவ முதிர்ச்சி போதவில்லை. எப்படியோ சிறுமி வேகவதி, எட்டாவது வயதில் ஸ்ரீமதி சுந்தரராமனாகி விட்டாள்! இஃது உலகறிய நடந்த சம்பவந்தான்; ஆனால் அதன் வரம்பு அன்று வேகவதியின் ஹிருதயத்தை வட்டம் போட்டுக் கட்டவில்லை.

வேகவதியும், சுந்தரராமனும் நிறுவை தட்டாத செல்வர்கள். ஒன்றாய்ப் படித்தனர்; ஒன்றாய் ஆடினர்; ஒன்றாய் நின்றனர்; ஆனால் கொள்கையில் மாத்திரம் இரண்டாய் நின்றனர்.

அவளுக்குப் பிடித்தது கலை; அவனுக்குப் பிடித்தது தேசியத்திலும் துடிதுடித்த தேசீயம். இரண்டும் நாட்டிற்குத் தேவையென்பது அவர்களுக்குத் தெரியம். ஆனால் எது முந்திய தேவையென்பதை முடிவுகட்ட முடியவில்லை. கலையில்லாத நாட்டில் தேசீயத்திற்கு மதிப்பில்லை யென்பது அவள் வாதம்; தேசீய சுதந்திரமில்லாத நாட்டில் கலை, கனிய முடியாதென்பது அவன் பிரதிவாதம்! இரண்டும் பெரிய பிரச்னை. அவர்களின் பிராயம் பிஞ்சு. நாட்டின்வேகம், கலாசாலையில் புகுந்த பலன், முதிராத மாணவர்களை, முதிர்வுகண்ட பிரச்னைகள் கவ்விக் கொண்டு திணற வைக்கின்றன. அவனும் அவளும் பிராயப் பக்குவத்தை எட்டாத போதே வாழ்க்கையும் முடி போட்டுக் கொண்டுவிட்டது. கொள்கையில் பேதப் பட்ட இருவரும், வாழ்வில் ஒன்றுபட முடியுமா? என்பதை எடைபோட பெற்றோரும் விடவில்லை; அவர்களின் பிஞ்சுப்பருவமும்

மறித்துவிட்டது. இதனால் அவர்களுக்கிடையில் தற்காலிகமாய் பள்ளியில் நேர்ந்த பிரிவு, நிரந்தரமாகி விடுமென்று பிரிவின் தொடுவாயில் அவர்கள் அநுமானிக்கவில்லை.

வழக்கம் போன்ற கலை-தேசீய விவாதம் ஒருநாள் சுந்தரராமனைக் கையோங்க வைத்துவிட்டது. சுந்தரராமனின் கை கொடுத்த ஒரே அறையில், வேகவதியின் மிருதுவான கன்னம் தெறித்து, கசிந்த ரத்தம் சொட்டுவிடும் நிலைமைக்கு வந்துவிட்டது! அறையும்போது வேகவதியின் கன்னத்திலிருந்துதெறித்த ரத்தத்தில் ஒருதுளி,சுந்தராமனின் நெற்றியில்ஒரு பொட்டு வைத்தது. அவ்வளவுதான்! வேகவதியின் அதரங்கள் சுந்தரராமனின் செய்கைக்காக விரியவே இல்லை. ஆனால் ஒரு கூரிய பார்வை. சோகம் சுரந்த அந்தப் பார்வை, சுந்தரராமனை விரோதிக்கவில்லை. ஆராதனைசெய்தது! அதன் அர்த்தம் அந்நிலையில் அவனுக்குப் புரியவில்லை; புரியவும் முடியாது. காதல் இதயத்தின் அடியிலிருந்து அத்தனை பாவங்களையும் ஊடுருவிக்கொண்டு கண்களின் வழியாக வந்த சுத்தமான பார்வையல்லவா அது! அதன் அர்த்தத்தை அப்பொழுது புரிந்துகொள்ள, ஆயிரமாயிரம் காதல் இதயங்களின் பக்கும் ஓரிதயத்தில் சார்ந்து, அதில் அதி காதலின் அமரத்வம் சுடரவேண்டும். அப்பொழுதுதான், வேகவதியின் பார்வைக்குரிய பாவத்தை புரிந்துகொள்ள முடியும். உண்மையிலேயே வேகவதியின் கூரிய நேர்ப் பார்வை, சுந்தரராமனைப் பிளந்துவிட்டது! இஃது அவனுக்குப்! புதிது!!

வீட்டில் ஏகப் பரபரப்பு! நாளை தீபாவளி. முதல் நாள் வேகவதியின் ஆய்வீட்டில்தான்



இந்தச் சம்பவம். பெற்ருேர் பதறினர்! தலைத் தீபாவளி முடியுமுன் மகளின் அலகு தெறிக்கக் கோர வடுவைப் போட்டுவிட்ட மருமகனை, மாமி-மாமனர்கூட மனம் புழுங் கப் பார்த்தனர்; ஆனல் அதை மனதிலேயே மடக்கிவிட்டார்கள். வேகவதி உபாதையைச் சமாளிக்க முடியாமல் மூர்ச்சையானள்! அப்பொழுது ஒரு வார்த்தை: 'சுந்தர்! இதற் காக என்னை ஒதுக்கிவிடாதே! நான் உன் வாழ்வின் மொட்டு'.

இதைத்தான் சொன்னுள். அப்புறம் பேசவேயில்லை! சுந்தராமன் தொட்டுத்தாலி கட்டியதற்கு வேகவதியின் காதல் இதயத் திலிருந்து கிடைத்த பரிசு இதுதான்!

நாளைய தீபாவளியின் சோபை அவனைத் தீண்டவில்லை. மனம் இடிந்துவிட்டான். அதற்குமேல் அவனல் அங்கு நிற்கமுடிய வில்லை. ஒரே ஓட்டம்! ரயிலடி சேர்ந்தான்; சில மணி நேரத்தில் பெற்ருேரை அடைந் தான்; இவன் அங்கு சேருமுன் தந்தி ஒன்று பெற்ருேரைச் சேர்ந்துவிட்டது! ஆத்திர ரேகை தாரை ஓடிய முகத்தோடிருந்த தந்தையின் முன்னே, வதங்கிய முகத்தோடு நின்ருன் சுந்தராமன்! மகனின் கண்களில் நீர் கசியச் சம்மதியாத தந்தையையே தன்னை மிஞ்சச்செய்துவிட்டது சுந்தராமனின் செய்கை. அவ்வளவு வாத்ஸல்யத்தை பாத்யதையோடு பறித்துவிட்டாள் வேகவதி!

ஒரே அறை! மகனின் கன்னம் புண்பட்டு விட்டது; ஆயினும் கோபம் தீரவில்லை. ஒருவரையும் திரும்பிப்பாராமல்—ஒன்றை யும் சிந்தியாமல் சுந்தராமனை கப்பல் துறைக்கு இரவே இழுத்துவந்து மறுநாள் கப்பலில் சிங்கப்பூர் தமது வியாபார ஸ்தலத் திற்கு அனுப்பிவிட்டுவந்து, தீபாவளிப் பண்டிகையைத் தன்மட்டில் தள்ளிவைத்து விட்டார்! மகனை சிங்கப்பூருக்கு அனுப்பியது, வருவாய் கருதியல்ல; பருவம் முதிரவும்; பழக்கம் விசாலிக்கவும்; கல்வி கற்கவும்!

சுந்தராமன் சிங்கப்பூரைச் சேர்ந்துவிட் டான். வயதும் படிப்பும் ஒத்து ஏறின. பாவ உணர்ச்சியும் பக்குவப்பட்டது. நாட்டன்பு, உணர்ச்சியாக மாற, பருவமும் சந்தர்ப்பமும் இணங்கிவந்தன. உலகச்சண்டை! அப்புறம் கிழக்காசியப் போர்! உலகமே ஆடிற்று! எங்கும் குறிப்பாகக் கிழக்காசியாவில் திடீர் மாற்றம்! பாரதத்தின் விலங்கை முறிக்க சுதந்திர இந்திய தற்காலிக சர்க்கார் அமைந்தது. இந்திய தேசீய ராணுவம் விரிந் தது; பிறகு எங்கும்—எவருக்கும் சுதந்திரப்



பரிமாறல்! முப்பது லட்சம் மக்களும் சுதந்திர ஒளியில் குளித்துப் புனிதமாயினர்; தியாகச் சத்து ஏறிற்று. அவ்வளவுதான்; அப்புறம் சரித்திரம் பேசும்!

இதில் சுந்தரராமன் கலக்கப்படவில்லை; கலந்தான். கனிந்து தொங்குகிற பழத்திற்கு காம்புப் பலம் குறைவல்லவா? சுந்தரராமன் உணர்ச்சியில் பழுத்துவிட்டான்; பிறகு அவனைத் தாங்கிக்கொண்டிருந்த சுயநலக் காம்பிற்கு வலிவேது? உரிமைப் புயல் அடித்தது; தியாகத் திடலில் விழுந்துவிட்டான்.

சுதந்திர இந்திய தற்காலிக சர்க்காருக்கு சுந்தரராமன் அருமையல்ல; லட்சாதிலட்சம் செல்வ இளைஞர்கள் அதற்கு அஸ்திவாரம்! இதற்கு சுந்தரராமன் ஒரு சாட்சி!

அவனை வேகவதியிடமிருந்து பிரித்து வைத்த தீபாவளி தினத்திலேயே, ஒரு தேசிய வீரனாய்-தியாகக் காளையாய்-கடமையைச் செய்து லட்சியத்தைப் பூர்த்தி செய்த தீர்க்கனாய்-வேகவதியின் கலாலட்சியம் படரும் பந்தலாய்-வேகவதியைச் சந்திக்க வேண்டுமென்று அன்று அவன்கொண்ட பிரதிக்ஞைக்கு அநுகுணமாக சந்தர்ப்பம் வந்தது; சுந்தரராமன் இணைந்தான்!

உரிமைப்புயலின் அடியில் தியாகத்திடலில் விழுந்த சுந்தரராமன் கடமையைச் செய்தான். உண்மையான ஒரு மனைவிக்காக புருடன் திருடுவது கூட முறை மீறிய செயலல்ல என்கிறது, காதல் வேதம்! சொந்த நாட்டு விடுதலைக்காக எதையும் செய்வது தவறல்ல என்பது அரசியல் வேதம்! முந்தியதைக் கையாளுகிற மனிதஜாதி, பிந்தியதையும் செயலாடலாம் என்பது சுந்தரராமனின் தீர்ப்பு! என்ன வெல்லாமோ செய்தான்; எவ்வளவோ ரத்தத்தைக் குடித்தான்; எவ்வளவோ ரத்தத்தை வடித்தான்; எல்லாம் நேதாஜிக்காக அல்ல; ஒவ்வொரு மனிதனும் விரும்புகிற தேச சுதந்திரத்திற்காக! கடைசியாக நாட்டைப் பிடித்த துரதிர்ஷ்டம், பட்ட பாட்டையும், கொட்டிய ரத்தத்தையும், விட்ட உயிர்களையும், அடிமையைப் பெயர்த்தெறியத் தடுத்துவிட்டது; ஆனால் அடிமையின் இடுப்பு ஒடிந்துவிட்டது! பிறகு இந்திய தேசிய ராணுவ வீரர்கள் பிடிபட்டனர்; சிறையிடப்பட்டனர்; கொலையாளிகளெனப் பிரகடனிக்கப்பட்டனர்; விசாரணைக்கு குடிவந்த அன்னிய அரசாங்கம் ஏற்பாடு செய்தது அந்தக் கொலையாளிகளின் ஜாபிதாவில் சுந்தரராமனும் ஒருவன்; அவன் பெயரும் பத்திரிகையில் ஏறிற்று; வேகவதியும்அதைப் பார்த்து விட்டாள்! அப்பா! அவளை ஆனந்த அலைகள் மோதித் தீர்த்துவிட்டன! ஆடினாள்



ஓடினாள்; அப்புறம் தேடினாள்; எதை? எதையோ அவளுக்கு அகப்படாத ஒன்றை!

சுந்தரராமனின் செய்தி, வேகவதியின் நெஞ்சில் எத்தனைவித இன்பங்களைப் பெய்ததென்பதற்கு நாம் முழுவிபரம் கொடுக்க முடியாது. அதன் இனிமையை வேகவதியின் இதயம் ஒன்றுதான் அளவிட்டு அநுபவிக்க முடியும்! எட்டு வருடப்பிரிவில், தடம் தெரியாமல் ஸ்தம்பித்து நின்ற வாழ்வை, கட்டித் தழுவி இட்டுச் செல்லவந்த காந்தனின் செய்திக்கு வேகவதிதான் ஆதி! அவள் கொள்ளும் இனிமை நம்மையும்அள்ளுகிறது;

அதோடு ஒதுங்கி விடுவோம்.

செய்தி கிடைத்த அன்றைய மாலைதான், வேகவதி பழைய தோற்றங்களுடன் சல்லாபித்துக்கொண்டிருந்தாள்.

இன்னும் சில தினங்கள் பிந்திவரப் போகிற தீபாவளி தினம், வேகவதியின் ஹிருதயத்தை அருட்டிவிட்டது. அவளை அவயவ வாரியாக வேதனைசெய்த சம்பவத்தை இழுத்துவந்த தினமல்லவா அது! அதே தினம் வருகிறது; வந்தே தீரும். ஆனால் அந்த சம்பவம்.........? இப்படி நினைக்கவே நடுங்குகிறது உடல். ஆனால் விதி...?

விசாரிக்கப்படவிருந்த இந்திய தேசிய ராணுவ வீரர்களின் வரிசையிலிருந்து சில தினங்கள் பிறகு சுந்தராராமன் விடுதலை பெற்றான்?

சிறையைவிட்டு வெளியேறினான்; மலர் மாலைகள் அவனை அழுத்தின.

சொல்லிவைத்தாற்போல நாளை தீபாவளி! விடைபெறாமல்விட்டுவந்தவேகவதியைவிபரம் கொடாமலேயே தீபாவளியன்றே திடீரென்று தொடவேண்டுமென்று கட்டுமீறி அவாவினான்.

அவனின் விடுதலைச் செய்தி வேகவதியை எட்டுமுன்பு, அவன் அவளை எட்டி விட்டான்!

தீபாவளிக்கு முதல் நாள் மாலை; அதே வீட்டின், அதே மாடி; எட்டு வருடங்களுக்கு முன்பு வேகவதியின் அலகு தெறித்த அதே நேரம்! வேகவதி எதையோ நினைத்துக் கொண்டு மாடியில் நின்றாள். நாளை தீபாவளிக்கு எப்படியும் அவர் வந்துவிடலாகாதாவென்ற ஏக்கம் அவளை அலைத்துக் கொண்டிருந்தது.

அதே சமயம் மாடிப் படி அதிர்ந்தது; திரும்பினாள்; தந்தை ஓடிவந்தார்; கையில் கொண்டுவந்த பத்திரிகையை வேகவதியிடம் வீசினார்! பேசவில்லை. அவ்வளவு மகிழ்வு!

சுந்தராராமன் விடுபட்ட செய்தி பத்திரிகையில் மின்னிற்று. பார்த்தாள். என்ன செய்வாள்? என்னதான் செய்ய முடியும்? பிரித்து வைத்த தெய்வம் பொருதிவிடுகிறது என்று எண்ணினாள். பாவம் அபலை!

இந்த நிலையில் வீதியில் ஏகக் கோஷம்! அதோடு மாலைப் பாரத்தோடு வந்த மோட்டாரின் அலறல் வேறு. வேகவதியும், தந்தையும் விபரம் தெரிவதற்காக மாடி வராந்தாவுக்கு வந்தனர். ஆம்! அங்கே வீட்டுக்கு முன்னால் தேசிய வீரன்—வேகவதியின் கணவன், கம்பீரமாய்க் காரைவிட்டு இறங்கினான்! கூடி விட்ட மக்களுக்கு கைகுவித்தான். இதை மூன்றாவது மாடியில் நின்ற வேகவதியின் கண்கள் பார்த்தன; ஹிருதயம் தாறுமாறாய் விம்மி விட்டது; உடல் துடிப்பு இமைக்கணத்தையும் முந்திக் கொண்டு விட்டது; தன்னை மறந்தாள்; தன் நிலையையே விட்டு விட்டாள்; நிற்பது எங்கே? என்ற நினைவே அவளை விட்டுநீங்கி விட்டது. பாசம் படர்ந்த பர்த்தாவின் பாதங்கள் தாய் வீட்டுப் படியில் படுமுன், தான் தொட்டு வணங்கி விட வேண்டு மென்ற ஆசையின் பூரிப்பு மிஞ்சி விட்டது. அவள், அவளிலிருந்து அகன்று விட்டாள்; ஆசையை நிறைவேற்ற மாடிப்படியை மறந்து மூன்றாவது மாடியில் நின்றவாறு ஒரே குதி! வாயிலில் ஜனத்திரளின் மத்தியில் நின்ற சுந்தராராமனுக்கு முன்னே விழுந்தாள்!! மக்கள் கூட்டம் பதைபதைத்தது! விழுந்தவளை தூக்குவதற்காகக் குனிந்த சுந்தராராமன் ஐயோ! வென்ற அலறலுடன் நிமிர்ந்தான்! ஏன்? வேகவதியின் உயிர், சுந்தராராமனின் திடீர் வருகையில் தடாரென்று பிரிந்து விட்டது!

அலறி நிமிர்ந்த சுந்தராராமன், திரும்பவுமில்லை; குனியவு மில்லை. அவனை வரவேற்பதற்காகக் கூடி இருந்த கூட்டம், செத்துப் போன வேகவதிக்கு அனுதாபம் காட்டத் திரும்பி விட்டது! சுந்தராராமனும் மறைந்து விட்டான். எங்கு? எங்கோ!

# பொதுவுடமை வேஷம் கலைந்தது

நாகாசுரனைப் போல ரஷ்யாவை கொடுங் கோலாட்சி புரிந்த பீட்டர் என்னும் ஜார் மன்னன் 1917-ல் வீழ்ச்சியுற்றன். ஜனசக்தியைத் திரணமாக மதித்த ஜார் மூடன் புது யுகப் புரட்சிப் புயலில் இமயமலை வீழ்ந்தது போல் சாய்ந்தான். அவனுடன், ரஷ்யப்பாட்டாளி மக்களின் ரத்தத்தை உறிஞ்சிய முதலாளிகளின் சிரங்களும் உருண்டன. இவ்வாறு முதலாளித்துவத்திற்கு முதலடி கொடுத்தது ரஷ்யப் புரட்சி

உலகில் முதலாளித்துவத்தை கருவறுத்து பாட்டாளி மக்களின் ராஜ்யத்திற்கு அஸ்திவாரமிட்டது ரஷ்யா. யதேச்சாதிகார ஆட்சிக்கும் பண மூட்டைகளின் சுரண்டலுக்கும் சாவுமணியடிப்பதில் வழிகாட்டியாக இருந்ததும் ரஷ்யாவே. ஒப்பில்லாத பொதுவுடைமைச் சமுதாயத்தை நிர்மாணிக்க முற்பட்டதும் அந்நாட்டிலேயே தான். இவ்வித சீரும் சிறப்பும் வாய்ந்திருந்த ரஷ்யாவின் இன்றைய நிலையைப் பரிசீலித்தோமானால், புரட்சித் தலைவன் லெனினுடைய சமதர்ம சாம்ராஜ்ய மென்னும் சீரிய லட்சியத்தை சர்வாதிகாரி ஸ்டாலின் சின்னாபின்னமாக்கி விட்டான் என்பது விளங்கும்.

"உலகில் உண்மையான ஜனநாயகத்தின் ரட்சகன் ரஷ்யாதான். சமாதானத்தின் உற்ற தோழர் ஸ்டாலினே" என்பது ரஷ்யா தற்போது ஜெபிக்கும் மந்திரமாக விளங்குகிறது. ஜனநாயகத்தின் பாதுகாப்பாளன் என மார்தட்டிக் கொள்ளும் ரஷ்யா இன்று ஐரோப்பாவில் ஜெர்மனி, ஆஸ்டிரியா, பல்கேரியா, ருமேனியா போன்ற பல நாடுகளில் ஏராளமான ரஷ்யத் திருப்புகளை வைத்துக் கொண்டிருக்கிறது. இது பற்றி ஒரு அமெரிக்க ராணுவப் பத்திரிகையில் மேஜர் ஹால்ஸ்டீவர்ட் என்பவர் கீழ்க்கண்டவாறு எச்சரித்திருக்கிறார்.

"ரஷ்யா விரும்பினல், ஐரோப்பா முழுவதையும் 48 மணி நேரத்தில் (இரண்டே நாட்களில்) பிடித்துவிட முடியும். பல்லாயிரகணக்கான ரஷ்யத் துருப்புகள் ஐரோப்பாவின் பகுதிகளில் முகாம் போட்டிருக்கின்றன. யுத்தம் முடிந்து இரண்டு வருஷங்களாகியும், இந்த ரஷ்யத்துருப்புகள் வாபஸ் வாங்கப்படாததன் மர்மம் தெரியவில்லை. இத்துருப்புகள் எந்நேரத்திலும் போருக்குத் தயாராக உள்ளன. ஒவ்வொரு படையிலும் 60 ஆயிரம் ஆட்கள் வீதம் குறைந்தது. 10 ரஷ்ய இயந்திரப்படைகள் ரஷ்யாவுக்கு வெளியே நிறுத்தப்பட்டுள்ளன. மொத்தமாக ரஷ்யாவின் ராணுவபலம் 40 லட்சம் துருப்புகள் என மதிப்பிடப்படுகிறது."

துருப்புகளை நிறுத்தி வைத்துக் கொண்டு துப்பாக்கிமுனையில் சமாதானத்தைப் பாதுகாக்கிறது ரஷ்யா! ஏன், இதே ரீதியில் உலகம் முழுவதும் சமாதானத்தை நிலைநாட்டுவது தன்னுடைய பொறுப்பென தோழர் ஸ்டாலின் சொன்னாலும் ஆச்சரியமடைவதற்கில்லை. ஆனால் "நாங்கள் நாடுவது சமாதானமே" என யுத்தத்திற்குமுன் கூறிய ஹிட்லரின் தொனிக்கும் தற்போதைய ஸ்டாலினின் குரலுக்கும் அதிக வித்தியாசமிருப்பதாகக் காணோம்.

இதுதவிர ஆசியாசம்பந்தப்பட்டமட்டிலும் ரஷ்யா கை கட்டிக்கொண்டு சும்மாஇருக்கவில்லை. எண்ணெய் வயல்கள் நிறைந்த பாரசீகத்தின் வடக்குஎல்லையில் தன் துருப்புகளைக் கொண்டு வந்து அது குவித்திருக்கிறது. பாரசீக எண்ணெய் ஊற்றுகளில் கண்ணோட்டம் பாய்ச்சியுள்ள ரஷ்யா தன் துருப்புகளை காட்டி மிரட்டி, அங்கு கிடைக்கும் எண்ணெய்

"சோஷலிஸ்ட்"

யில் பங்கு கேட்கிறது. மேலும் சீனாவின் உள்நாட்டு கலகத்தில் தலையிட்டு ரஷ்யா செய்யும் திகிடுதத்தம் சொல்லத்தரமன்று. இதையே சீனக்குடியரசின் உதவி ஜனாதிபதியான டாக்டர் சன்போ சந்தேகமற கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்.

“1931 ல் ஜப்பானால் உண்டான அபாயத்தைவிடப் பேராபத்து இப்போது ரஷ்யாவினால் ஏற்பட்டிருக்கிறது. உள்நாட்டுக்கலகம் செய்து சீனக்குடியரசை நிர்மூலமாக்கினால்தான் தங்கள் அதிகாரம் பரவும் என்ற விபரீத எண்ணங்கொண்ட கம்யூனிஸ்டு கலகக்காரர்களுக்கு ரஷ்யா தளவாட சப்ளையும் மற்றும் ராணுவ உதவிகளும் செய்துவருகிறது. சீனாவைச் சேர்ந்த மஞ்சூரியாவில் சீன கம்யூனிஸ்டுகளின் கை மேலோங்கி இருப்பதற்கு காரணம் ரஷ்ய உதவியே. டைரன் துறைமுகத்தை சோவியத் ரஷ்யத் துருப்புகள் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. சீனா முழுவதையும் விழுங்கிவிடவேண்டுமென்பது ரஷ்யாவின் நீண்டகால ஆவல். சீனாவோ மிகப்பெரிய தேசம். ஆகையால் சீனா முழுவதையும் ஒரேயடியாக வாயில் போட்டுக்கொண்டால் மெல்லமுடியாது போய்விடும். இதை முன்னிட்டு படிப்படியாக சீனாவை ஆக்ரமித்து ரஷ்யாவுடன் சேர்த்துக்கொள்ள அதுபார்க்கிறது.இதன் பூர்வாங்கநடவடிக்கையேசீனஉள்நாட்டுக்கலகம். ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குகொண்டாட்டமல்லவா? அதேபோல உள்நாட்டுக்கலகம் சீனாவில் நடப்பது தோழர் ஸ்டாலினுக்கும், அவருடைய கைக்கூலிகளான சீன கம்யூனிஸ்டுகளுக்கும் கொண்டாட்டம்.

யுத்தத்திற்குப் பின் ஆசிய மக்களிடையே தோன்றிய அரசியல் விழிப்பை தனக்கு சாதகமாக்கிக்கொள்ள வேண்டுமென்பது ரஷ்யாவின் விருப்பம். இல்லாவிடில் ஜாவாவிலும், இந்தோசீனாவிலும் சுதந்திரம் வேண்டிப்போராடிவரும் தேசீய இயக்கத்தினரிடம் ஆதரவு இருப்பதாக அது பாசாங்கு செய்யுமா? அனுதாபம் காட்டி தன் செல்வாக்கை தேசீய இயக்கத்தினரிடையே பரப்பிக்கொள்ளவே இச்சூழ்ச்சி.உண்மையில் அதற்கு ஜனநாயக மனப்பாங்கு உண்டென்றால், சீனாவில் கம்யூனிஸ்டுகள் நடத்தும் கோர கிருத்யங்களுக்கு ரஷ்யா ஆதரவு அளிக்காது; அளிக்கவும் கூடாது. மேலும் பாலஸ்தீன அராபியப் பிரச்னையில் அராபிய மக்களின் காலை வாரிவிடும் வகையில் பாலஸ்தீனப் பிரிவினையை ஆதரிக்கும் அதன் போக்கு விசித்திரமாகவே உள்ளது. எதையெடுத்தாலும் அமெரிக்காவுக்கு நேர்மாறான கொள்கையைக் கொண்ட ரஷ்யா, இன்று பாலஸ்தீனப் பிரிவினையில் பிரிவினைக்கு சாதகமாக அமெரிக்காவுக்கு வால் பிடிக்கிறது. இதற்குகாரணம்இல்லாமலில்லை.

பாலஸ்தீனத்தை வெட்டிச்சாய்க்கும் கைங்கரியத்தைச் சாதிப்பதில் அராபியர்களின் கடுமையான எதிர்ப்பை சமாளித்தாகவேண்



டும். இதற்கு அமெரிக்கா, ரஷ்யா ஆகிய வல்லரசுகளிடம் நேசதேச ஸ்தாபனம் ராணுவ உதவியைக்கோரும். ராணுவ உதவி செய்வதாக கூறிக்கொண்டே பாலஸ்தீனத்தில் சுமார் 10 லட்சம் ரஷ்யத்துருப்புகளைக் கொண்டுபோய் நிறுத்திக்கொள்ளலாம். இதைக்கொண்டு மத்தியதரைக் கடலில் அது பல கேந்திரமான துறைமுகங்களை சம்பாதித்துக்கொள்ளமுடியும். தவிரவும் பாலஸ்தீனத்தில் பலமாக காலையூன்றிக்கொண்டால், அராபிய நாடுகளையும் ஒவ்வொன்றாக ரஷ்ய யூனியனுக்குள் சேர்த்துக்கொள்ள சர்வாதிகாரி ஸ்டாலினுக்கு வசதி கிடைக்கும். அதற்குமேல் எகிப்துடன், அபிசீனியா வழியாக ஆப்பிரிக்கா கண்டத்திலும் கம்யூனிஸ ஆதிக்கத்தை விஸ்தரித்துக்கொள்ளலாம். அரசியல் சதுரங்க விளையாட்டில் கைதேர்ந்த தோழர் ஸ்டாலின் தற்போது வாய்த்துள்ள அரிய சந்தர்ப்பத்தை நழுவவிடப்போகிறார்? சோழியன் குடுமி சும்மா ஆடாது என்பதல்லவா பழமொழி. பாலஸ்தீனப் பிரச்னையில் பிரிவினையை அது ஆதரிப்பதன் மர்மம் இதில்தானிருக்கிறது.

நிற்க, நேச தேச ஸ்தாபனத்திடம் ரஷ்யாவுக்கு அவநம்பிக்கை வலுத்து வருவதாகவும் உலக சமாதானத்தை நிலை நிறுத்தவேண்டிய அதன் போக்கு ஒரு தினுசாக மாறிவிட்டதாகவும் மேற்படி ஸ்தாபனத்தில் ரஷ்யப் பிரதிநிதி குளாமிகோ அங்கலாய்த்திருக்கிறார். வல்லரசுகளின் ரத்து அதிகாரத்தை எடுத்துவிடவேண்டுமென்ற நியாயமான கோரிக்கையை ஒரு தீர்மானத்தின் மூலம் அர்ஜென்டைனாவின் பிரதிநிதி நேச தேச ஸ்தாபன கமிட்டியில் சமர்ப்பித்தபோதுதான் ரஷ்யாவின் அவநம்பிக்கை அணுகுண்டு வெடித்தது. உலக ஸ்தாபனத்தில் வல்லரசுகளுக்கு ஒரு நீதி, குட்டிநாடுகளுக்கு ஒரு நீதி என இருந்துவரும் பட்சபாதத்தை ஒழித்துக்கட்டவேண்டுமென்பதே அத் தீர்மானத்தின் சாரம். உலக நாடுகளில் பெரும்பாலானவற்றின் முடிவை நிராகரிக்கும் உரிமை வல்லரசுகளுக்கு ரத்து அதிகாரத்தின் வாயிலாக கிடைக்கிறது. இவ்வித ரத்து அதிகாரம் இந்தியா, எகிப்து, ஆஸ்திரேலியா போன்ற சிறு நாடுகளுக்கு கிடையாது. நேச தேச சபையில் இந்த ரத்து அதிகாரத்தை பிரயோகித்து அநேக தடவை உலக நாடுகளின் அபிப்பிராயத்திற்கு மதிப்பில்லாமல் செய்திருக்கிறது ரஷ்யா. அடங்காப் பிடாரித்தனமாக நடந்துகொண்டு உலக நாடுகளில் பெரும்பாலானவற்றின் அங்கீகாரம் பெற்ற திட்டங்களை பாழ்படுத்தினதுடன் நிற்காது நேச தேச ஸ்தாபன நடவடிக்கையையே அது ஸ்தம்பிக்க வைத்துவிட்டது. இப்போது நேச சபையிடம் நம்பிக்கை வரவரக் குறைந்துகொண்டே போகிறதாம். ஐரோப்பிய நாடுகளில் சுமார் 40 லட்சம் ரஷ்யத் துருப்புகளை நவீன சாதனங்கள் சகிதமாக வைத்துக்கொண்டு போருக்குத் தயாராக நிற்கும் ரஷ்யாவுக்கு 'சமாதான ஸ்தாபனத்தில் எதற்காக' நம்பிக்கை இருக்கப்போகிறது?

மற்றொரு கவனிக்கத்தக்க விஷயம் என்னவென்றால், நேச தேச சபையில் ரஷ்யாவுக்கும், இந்தியாவுக்கும் நேரடியான மோதல் ஏற்பட்டிருப்பதாகும். பந்தோபஸ்து கவுன்சிலில் ஒரு ஸ்தானம்பெற இந்தியா முயற்சித்துவருகிறது யாவருமறிந்ததே. பெரும் உபகண்டமான இந்தியா, பந்தோபஸ்து கவுன்சில் மெம்பராவது முற்றிலும் நியாயம். நேச தேச சாஸனத்தின்படி பார்த்தாலும், பிரதேசவாரி பிரதிநிதித்துவ நியதிப்படி இந்து மகா சமுத்திரத்தில் பிரதானமாக உள்ள இந்தியாவுக்கு பந்தோபஸ்து கவுன்சிலில் இடமளிப்பதே ஒழுங்கு. இது ரஷ்யாவுக்கு நன்றாகத் தெரிந்தேயிருக்கும். ஆனால் பந்தோபஸ்து கவுன்சிலில் ரஷ்யாவின் கொள்கைக்கு இந்தியாவிடமிருந்து நிரந்தர ஆதரவு கிடைக்குமென நம்புவதற்கில்லை. எனவே தனக்கு எப்போதும் கையாள் போல உள்ள யுக்ரேனை இந்தியாவுக்கெதிராக போட்டிக்கு அது நிறுத்தியிருக்கிறது. அத்துடன் யுக்ரேனுக்கெதிராக போட்டியிடும் இந்தியா இன்று அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய ஏகாதிபத்திய நாடுகளின் கைப்பாவையாகிவிட்டதாக வேறு ரஷ்யா வசைபுராணம் ஒப்புவிக்கிறது. தம் கையாளான யுக்ரேன் வெற்றிகொள்வதற்கு இடைஞ்சலாக நிற்கும் இந்தியாவை தன் மனம் போன போக்கில் வாயாறச் சபித்து அது ஆறுதல் கொள்கிறது.

பொதுவுடைமை வேஷத்தில் உலகம் முழுவதையும் கட்டியாள கனவு காண்கிறார் தோழர் ஸ்டாலின். இதற்காக ஜனநாயக பஜனை செய்துகொண்டே அடுத்த போருக்கு கச்சையை வரிந்துகட்டுகிறார். அரசியலில் சாணக்கியனை வெல்லும் சாகஸம் வாய்ந்த ஸ்டாலின் தன் ஏஜெண்டுகளைக்கொண்டு ரஷ்ய ஆதிக்கத்தைப் பரப்ப எதையும் செய்ய தயங்குவதில்லை. இந்தப் புது ரூபத்தில் உருவாகும் சமாதான விரோதியை உலக நாடுகள் தடுத்து தோற்கடித்தாகவேண்டும்.




# மதுரை ஹோட்டல் தொழிலாளர்களின் போர்முரசு!

## "கோரிக்கை நிராகரிக்கப்பட்டால் வேலை நிறுத்தம்"

## முதலாளிகள் சங்கத்தின் "பசப்புக்குண்டு"

மதுரையிலுள்ள காபி, டீ, சாப்பாடு ஆகிய சகல ஹோட்டல் தொழிலாளர்களும், தங்கள் குறைகளை உடனடியாகத் தீர்க்காவிடில் வேலை நிறுத்தம் செய்வோமென, தங்கள் (ஹோட்டல் தொழிலாளர்கள்) சங்கத்தின் சார்பாக, சர்க்காருக்கும் ஹோட்டல் முதலாளிகள் சங்கத்திற்கும் நோட்டீஸ் கொடுத்திருக்கின்றனர். மதுரையில் சகல ஹோட்டல்களும், சேர்ந்து சுமார் 400 இருக்கின்றன. இவைகளில் வேலை செய்பவர்களின் மொத்த எண்ணிக்கை 2000.

இவர்களின் கோரிக்கை யாதெனில்:—

★ வருஷத்திற்கு நான்குமாத போனஸ்.
★ சம்பளத்தில் நான்கில் ஒருபங்கு பஞ்சப் படி.
★ தினம் ஒன்றுக்கு எட்டுமணி நேர வேலை.
★ அதிக நேரம் வேலை பார்த்தால் இரட்டிப்பு சம்பளம்.
★ தங்குவதற்கு சுகாதார வசதியோடு கூடிய இட வசதி.
★ நோய் லீவ், சௌகரிய லீவ், அவசரலீவ் ஆகியவை உள்பட சம்பளத்துடன் வருஷத்திற்கு நாற்பத்தைந்து நாள் லீவ்.
★ இதன்னியில் விசேஷ தினங்களில் விடுமுறை.
★ வேலை செய்யும்போது ஏற்படும் விபத்துகளுக்கு சகாயம், இலவச வைத்திய உதவி.
★ பிற்கால சேமிப்பு நிதி.
★ வேலைக்கு உத்திரவாதம்.
★ உடனடியாக தங்கள் சங்கத்தை அங்கீகாரம்



செய்தல்.

இவைகள்தான் மதுரை ஹோட்டல் தொழிலாளர்கள் சங்கத்தின் வேண்டுகோள். இவைகளில் என்ன தவறுகள் இருக்கின்றன? இவைகளைக் கொடுக்க ஹோட்டல் முதலாளிகள் ஏன் மறுக்கவேண்டும்?

மேற்கண்ட நியாயமான கோரிக்கைகளை 2-10-47-ந் தேதி இத்தொழிலாளர் 'லேபர் ஆபீஸரு'க்கும், ஹோட்டல் முதலாளிகளுக்கும் அனுப்பி வைத்தனர். இதன்பேரில் 'லேபர் ஆபீஸரி'டமிருந்து அழைப்பு வந்து, தொழிலாளர் சங்க நடவடிக்கைக் கமிட்டிப் பிரதிநிதிகள் 'லேபர் ஆபீஸரை' சந்தித்து தங்கள் கோரிக்கைகளில் அடங்கியுள்ள நியாயங்களை எடுத்துக்கூறினர். லேபர் ஆபீஸரும் இதை உணர்ந்து இதர தொழிலாளர்கள் பெறும் சம்பளங்களையும் சலுகைகளையும் எடுத்துக்கூறி, இதுபோன்று ஹோட்டல் தொழிலாளர்களின் கோரிக்கைகளையும்ஓரளவு பூர்த்திசெய்யுமாறு முதலாளிகள் சங்கத்திற்கு தெரியப்படுத்தினர். ஆனல் முதலாளிகள் சங்கம் இதற்கு செவி சாய்த்ததாகத் தெரியவில்லை!

இதற்கு அவர்கள் கூறும் பதில் என்னவென்றால், "இந்த ஹோட்டல் தொழில் தனிப்பட்ட பிரத்தியேகமான நூதன தொழில்; இதை மற்ற தொழிற்சாலைகளுக்கோ, பாக்டரிகளுக்கோ ஒப்பிடக்கூடாது. மற்ற தொழிலாளர்களையும் ஹோட்டல் தொழிலாளர்களையும் ஒன்ருகக் கருதுவதும் கூடாது. ஆதலால் இத்தொழிலாளர்களுக்கு பஞ்சப்படியோ, போனஸோ கொடுக்கமுடியாது. கொடுப்பதற்குக் காரணமுமில்லை." இதுதான் அவர்கள் கூறும் முதல் காரணம்.

இவ்விதம் பதில் கூறிய முதலாளிகள் சங்கம் அத்துடன் நின்றிருந்தால் ஏதோ அறியாமை என்று விட்டுவிடலாம். அதேமூச்சில் இன்னெரு "பசப்புக்குண்டையும்" தூக்கிப் போட்டிருக்கிருர்கள். அதை நினைக்கும் போதுதான் நமக்கு சிரிப்பும் வெறுப்பும் சேர்ந்து ததும்புகிறது.





அதாவது, இந்த பொருளாதார நெருக்கடி காலத்தில் இப்புண்ணியவாளர்கள் ஹோட்டல் நடத்துவதின் நோக்கம் தொழிலாளர்கள் பிழைப்பதற்காகவும், பொதுஜன சௌகரியத்திற்காகவும்தான் என்கிருர்கள். அடடா! எப்படியிருக்கிறது வேடிக்கை? இது எந்த அளவில்தான் உண்மை என்பதை உரசிப் பார்ப்போம்.

"நாங்கள் ஹோட்டல் நடத்துவதன் நோக்கம் தொழிலாளர்கள் பிழைப்பதற்குத்தான்" என்று கூறும் முதலாளிகள், மற்ற தொழிலாளர்களையும் இந்த ஹோட்டல் தொழிலாளர்களையும் ஒன்ருகக் கருதக்கூடாதென்று கூறுவதின் காரணமென்ன? இவர்களுக்கு போனஸோ, பஞ்சப்படியோ கொடுக்கமுடியாதென பிடிவாதம் செய்வதின் அர்த்தமென்ன?

இத்தொழிலாளர்களுக்கு மட்டும் ஒரு வாயும் ஒருவயிறும்; மற்ற தொழிலாளர்களுக்கு இரண்டுவாய்களும் மூன்று வயிறுகளுமா இருக்கின்றன? பின் ஏன் தொழிலாளர் வர்க்கத்திடையே இப்பாகுபாடு கற்பிக்க வேண்டும்? இல்லை, இத்தொழிலாளர்கள் படும் சிரமம் மற்றவர்களைப் பார்க்கிலும் குறைச்சலா? சொல்லப்போனல் ஏனைய தொழிலாளர்களைப் பார்க்கிலும் இவர்கள் பாடுதான் இருதலைக் கொள்ளி எறும்பின் கதி போன்றது.

எப்படியெனில், இப்பொழுது மதுரையைப்

பொறுத்த வரையில் எல்லா காபி, சாப்பாடு ஹோட்டல்களிலும் வியாபாரம் வெகு தடபுடல் தான். இதில் சப்ளையர்கள் (பரிமாறுகிறவர்கள்) ஓயாது பம்பரமாகச் சுழன்று கொண்டு தான் இருக்க வேண்டும். இதற்கிடையில் சில குறும்புக்கார அன்பர்கள் காபிகிளப்புக்குள் புகுந்து புரியும் அட்டகாசம் தொழிலாளர் மானத்தையே போக்குகிறது. சப்ளையர்கள் என்றால் மிகவும் கேவலமாக நினைத்து, ஏ, ஓய், இட்லி கொண்டா, காபி கொண்டா, என்னும் அதிகாரங்களும், கொஞ்சம் காலதாமதமாகி விட்டால், என்ன ஓய், இவ்வளவு நேரம்?, புரோப்ரைட்டரிடம் கூறி சீக்கிரம் சீட்டுகிழிக்கவேண்டுமோ? என்று அரட்டுவதும் எல்லோரும் அறிந்த விஷயம். சில சமயங்களில், 'காபி, கீபி' சரியாக இல்லா விட்டால் அவ்வளவு தான்! அதற்கு ஜவாப்தாரி இந்த சப்ளையர்கள்தான். அப்படியே முகத்தில்கூட ஊற்றிவிடுவார்கள் சில துஷ்டர்கள். இதெல்லாம் கற்பனையல்ல நடந்த சில சம்பவங்களை வைத்துத்தான் கூறுகிறோம். இவ்விதம் தாங்கள் படும் கஷ்டத்தில் வருகிறவர்களையும் போகிறவர்களையும்வாவென்று பசரித்துஅவர்களுக்குநல்ல பிள்ளைகளாக நடந்தும், முதலாளிகளின் மனம் கோணுமலும் சப்ளையர்கள் நடக்க வேண்டும்.



சாதமோ, பலகாரங்களோ தயார் செய்யும் "மாஸ்டர்"களின் கதியோவெனில், குகைக்குள் அக்னி குண்டம் வளர்த்து ஆண்டவனுக்கு அவிற்பாகும் நல்கும் பண்டையகால முனிவர்களைப் போன்றதுதான்.

அதாவது, இவர்களில் பெரும்பாலோர், வயதுநாற்பதாகிஇருந்தாலும் கல்யாணமாகாத பிரமச்சாரிகளாகத்தான் இருப்பார்கள். வசதி இருந்தால்தானே கல்யாணம்! வாங்கும் சம்பளம் தன் செலவிற்கே காணதபோது கல்யாணமெங்கே கல்யாணம்! எனவே, இவர்கள், குகை போன்றுள்ள சிறு அறைகளுக்குள் அக்னி குண்டம் போன்று 'குபு குபு' வென்று கொழுந்து விட்டெரியும் அடுப்புக் கனலில் கிடந்து மெழுகாக உருகி மடிய வேண்டும். இந்த லட்சணத்தில் ஹோட்டல் கட்டிடத்திற்குள் காலை நான்கு மணிக்கு நுழைந்தால் இரவு பதினொரு மணிக்குத்தான் வெளியுலகம் காணமுடியுமாம்.

இதைத் தவிர, லட்டு, ஜிலேபி, ஹல்வா போன்றவைகளை வந்தவர்கள் உண்பதைப் பார்த்து, வட்டமிட்டுக்கொண்டு, நாக்கில் ஜலம் சொட்ட, ஒட்டிய வயிறோடு ஒரு கையில் எச்சல் வட்டைகளும், மற்றொரு கையில் மேஜை துடைக்கும் அசிங்கத் துணியும் பிடித்துக்கொண்டு நிற்கும் 'கிளீனர்' களின் பாடுதான் கொஞ்சமா? அன்றாடம் அத்தனை மேஜைகளையும், நாற்காலிகளையும், முக்காலிகளையும், பாத்திரங்களையும், கட்டடத்தையும்தானே தண்ணீர் கொண்டுவந்து கழுவி சுத்தம் செய்வதற்குள் அவர்களின் இடுப்பே முறிந்துவிடும்.

இவ்வளவு சிரமத்திற்குள்ளாகும் தொழிலாளர்களை, இதர தொழிலாளர்களுடன் ஒப்பிடக்கூடாதென தொழிலாளர்கள் பிழைப் பதற்காக ஹோட்டல்கள் வைத்திருக்கும் முதலாளிகள் சங்கம் கூறுவதில் ஏதாவது அர்த்தமிருக்கிறதா? இதுதான் போகட்டும், பஞ்சப்படி கொடுக்க முடியாதென்கிறார்களே இதில்தான் ஏதாவது நியாயமிருக்கிறதா என்று பார்ப்போம்! இதற்கு, யுத்தத்திற்கு முந்திய விலைவாசிகளின் நிலையையும், யுத்தத்திற்குப் பிந்திய தொழிலாளர்களின் சராசரி சம்பளத்தையும், ஹோட்டல் முதலாளிகள் ஒரு வருஷத்தில் அடையும் உத்தேச லாபத்தையும் கீழே குறிப்பிடுகிறோம்:—

**சராசரி விலைவாசிகள் விபரம்:**

| யுத்தத்திற்கு-முன் | | யுத்தத்திற்குப் பின் |
|---|---|---|
| 0—0—6 | காபி, டீ, | 0—2—0 |
| 0—1—0 | இனிப்பு (ஸ்வீட்) | 0—3—0 |
| | | 0—4—0 |




| | | | |
|---|---|---|---|
| 0—0—3 | இட்லி, | 0—1—0 |
| 0—0—6 | தோசை, | 0—2—0 |
| 0—3—0 | சாப்பாடு, | 0—8—0 |

அப்பொழுது ஒரு படி அரிசிக்கு ஆறு பேர்கள் சாப்பிட்டார்கள். சில சமயங்களில் ஒரு படி அரிசி முழுவதையும் ஒருவர் விழுங்கிவிடுவதுமுண்டு. இப்பொழுது ஒரு படி அரிசிக்கு 14 பேர்கள்.

### தொழிலாளர்களின் சராசரி சம்பள நிலை

| யுத்தத்திற்கு முன் | | யுத்தத்திற்குப் பின் |
|---|---|---|
| 30—0—0 | மாஸ்டர் | 45—0—0 |
| 22—0—0 | உதவி மாஸ்டர் | 30—0—0 |
| 16—0—0 | சப்ளேயர்கள் | 24—0—0 |
| 6—0—0 | கிளீனர்கள் | 9—0—0 |

இங்கிலேயில் ஹோட்டல்களில் தற்கால வியாபார நிலையும் லாப நிறையும் நடைமுறை உத்தேசம் என்னவென்றால், வருஷம் ஒன்றுக்கு மூன்று கோடியே அறுபத்து ஐந்து லட்சம்; கொள்முதல் இரண்டு கோடியே எழு லட்சத்து இருபத்தி இரண்டாயிரம். சம்பளம் பதிமூன்று லட்சத்து அறுபத்தி எட்டாயிரம். லாபம் ஒரு கோடியே நாற்பத்தி நான்கு லட்சம்.

இந்த 1 கோடியே 44 லட்சம் லாபத்தில் தொழிலாளர்கள் போனஸாகக் கேட்பது 4 லட்சத்து 56 ஆயிரம்தான். இவ்விதம் தங்கள் லாபத்தில் கிடைக்கும் ஒரு சிறு துண்டுத் தொகையை கொடுக்க மறுக்கும் ஹோட்டல் முதலாளிகள் சங்கம், தொழிலாளர்கள் பிழைப்பதற்குத்தான் ஹோட்டல் வைத்திருக்கிறோம் என்று எப்படிக் கூறலாம்? ஆகவே இவர்கள் கூறும் இந்த அர்த்தமற்ற விவாதம் இதன் மூலம் அடிபட்டுப் போகிறது.

அடுத்தபடியாக பொது ஜனங்களின் சௌகரியத்திற்காக ஹோட்டல் என்றார்களே அதிலாவது உண்மையிருக்கிறதா? அதிலும் கிடையாது. பொது ஜனங்களின் நன்மைக்கென்றிருந்தால் வருஷத்திற்கு கோடிக்கணக்கான ரூபாய்லாபம் பெறலாமா? ஒரு படி அரிசியை எட்டணு விற்குவாங்கி பதினன்கு கூருக்கி 'கப்' ஒன்று 8 அணு வீதம் 7 ரூபாய்க்கு விற்கலாமா? ஒருபடி அரிசி சமைக்க வேண்டுமானல் 3 ரூபாய் செலவழியுமா? நான்கு ரூபாய் கூட வைத்துக் கொள்ளட்டும்! ஒரு படி அரிசிக்கு மூன்று நான்கு ரூபாய் லாபம் பார்க்கலாமா?

இதைத்தவிர காபி ஹோட்டல்கள் ஆரம்பமாகும் பொழுது பொருள்கள் நன்ருகவும் விலைக்கு தகுந்ததாகவும் இருக்கின்றன. வர வர கழுதைதேய்ந்துகட்டெறும்பான துபோல் கொஞ்ச நாட்களில் பலகாரங்கள் சிறுத்து ருசியும் குன்றி விடுகின்றன. இதெல்லாம் எதைக் குறிக்கிறதென்ருல் ஹோட்டல் முதலாளிகள் லாபத்திலேயே கண்ணுயிருக்கிருர்களே தவிர அவர்கள் கூறுவது போல் இல்லை என்பதைத்தான்.

ஆகவே, "தொழிலாளர்கள் பிழைப்பதற்காகத்தான் தாங்கள் ஹோட்டல் வைத்திருக்கிறோம்" என்று ஹோட்டல் முதலாளிகள் சங்கம் கூறுவது உண்மையானல், தொழிலாளர்கள் கோரும் நியாயமான கோரிக்கைகளை வழங்குவதோடு, பொதுஜனங்களுக்கும் விலைக்கு தகுந்த பொருள்கள் வழங்கு மாறும் வர்ப்புறுத்துகிறோம்.



# "ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை"

**1 மண்டலம் (48நாள்) கிரமப்படி பூஜை செய்யப்பட்டது.**

**ஆயுள் பூராவும் பலன் தரக்கூடிய வெள்ளி ரக்ஷை ரூ. 43-12-0**
**தற்போது அனுப்ப வேண்டியது ரூ. 3-12-0.**

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை வேண்டியவர்கள் கோரும் கோரிக்கைகளை எழுதி தற்போது ரூ. 3-12-0 மணியார்டர்செய்யவும். கீழே கோடுத்துள்ளபடி நம்மிடம் ரக்ஷைவாங்கிய பிறகு 108 நாளைக்குள் நன்மையான நலன்கள் நடந்தால் பாக்கி ரூ. 40-0-0 அனுப்பவும். தற்போதுகேட்கும் ரூ. 3-12-0 ரக்ஷை வெள்ளிகவரிங்குக்கும், தபால் ரிஜிஸ்டர் செலவுக்கும் விளம்பர செலவிற்குமாக மேலேகண்ட தொகை கேட்கப்படுகிறது.

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை அணிவதால் ஏற்படும் நன்மைகள்.

1. சுகசரீரிகளாயும்,எப்போதும் போஜனாதிகளில் குறைவின்றியும்இருப்பார்கள்.
2. குடும்ப ஒற்றுமை, குடும்ப அபிவிருத்தி, தனதான்யாதிகள், வாக்கு பலிதம், குடும்ப நிர்வாக திருப்தி.
3. சகோதரம் ஒற்றுமை சகோதரமில்லாதவர்களுக்கு சகோதரம் ஏற்படும். பிரிந்த சகோதரம் கூடுவர்.
4. மாதுர் அபிவிருத்தி, வாகன அபிவிருத்தி, பூமி கட்டிட அபிவிருத்தி ஏற்படும்.
5. புத்திரங்களுக்கு ரோக நிவர்த்தி, மலடு உடையவர்களாயிருந்தாலும் புத்திரம் ஏற்படும்.
6. சத்துருக்கள் பங்கமடைவார்கள். தீராத ரோகமும் தீரும்.
7. வாலிபர்களுக்கு நல்ல குணவதி லபிப்பார்கள். மற்றவர்களுக்கு ஸ்திரீ நேசமும், ஸ்திரீயின் சிசுருஷையும் கிடைக்கும். பால்ய பெண்கள் அணிவதால் சத் புருஷனை அடைவார்கள். மற்றவர் அணிவதால் கணவன் ஒற்றுமை, பிரிந்த கணவனை அடைவார்கள்.
8. ஸ்திரீகள் அணிவதால் மாங்கல்ய தீர்க்கமும், புருஷர் அணிவதால் ஆயுள் தீர்க்கம்.
9. வாலிபர் அணிந்தால் பிதுருவின் பிரீதியை அடைவார். விசேஷ பாக்கியமும், லக்ஷ்மீ கடாக்ஷமும் ஏற்படும்.
10. கல்வி பயிலுபவர்கள் அணிந்தால் கல்வியில் தேர்ச்சியும், படித்தவர்கள் அணிந்தால் உத்தியோகமும் கிடைக்கும். விவசாயிகளுக்கு கிருஷிகம் மேன்மைபடும். வியாபாரிகளுக்கு வியாபார அபிவிருத்தி ஏற்படும்.
11. அவரவர்கள் செய்யும் தொழிலில் நல்ல ஆதாயம் கிடைக்கும்.
12. நல்ல போகபோக்கியமும் லாபத்தை உத்தேசித்து பணவிரயமும் ஏற்படும்.

N. B: அதர்மர்களும், நாஸ்திகர்களும் விசேஷ பலன்களை எதிர்பார்க்கமுடியாது. 2 ரக்ஷை ஆர்டர் செய்பவர், ஆர்டர் கிடைத்த 9-ம் நாள்தான் ரக்ஷை பிரசாதத்துடன் அனுப்பப்படும். வி. பி.யில் அனுப்ப சாத்தியப்படாது.

**ஸ்ரீ மஹாலெக்ஷ்மி ஜோதிஷ ஆபீஸ், கோட்டமருதூர்.**

**அரகண்ட நல்லூர் P. O. (S. A. Dt.)**

# அறிவிப்பு

## மாபெரும் தேசீய தொழிற்சாலை.

சேர்மன்: ஸ்ரீ பூபாலம் R. சந்திரசேகர ஐயா B.A.,
மைசூர் அசெம்பிளி மெம்பர்.

மானேஜிங் டைரெக்டர்: Dr. P. வரதராஜுலு நாயுடு,
அசோகபுரி, விழுப்புரம்.

தி தமிழ்நாடு மில்ஸ் அண்ட் பார்ம்ஸ் லிமிடெட் கம்பெனிக்கு வேண்டிய நிலம், தளவாட் சாமான்கள் ஆகியவை வாங்கியாகிவிட்டது. இக் கம்பெனியின், சில்க் ஜரிகை மில்கள் சேலத்திலும், ஆயில் மில்கள் மோரப்பூரிலும், பட்டு உற்பத்திச் சாலை ஹோசூரிலும், கால்நடைச் சந்தை அசோகபுரியிலும் விரைவில் ஆரம்பமாகும். ஏற்பாடுகள் துரிதமாய் நடைபெற்று வருகின்றன. இந்தக் கம்பெனியால் உற்பத்திசெய்யப்படும் பொருட்களுக்கு விற்பனை உரிமைபெற விரும்புவோர் விண்ணப்பித்துக்கொள்ள வேண்டும். கம்பெனியின் மூலதனம் ரூ. 5 லட்சம். அது ரூ. 10 மதிப்புள்ள சாதாரண பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

பத்து பங்குகளுக்கு குறைவாக யாருக்கும் கொடுப்பதில்லை.

★★

## தி தமிழ்நாடு கம்பெனி லிமிடெட்,

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்,

அசோகபுரி, (விழுப்புரம் மார்க்கம்)

# தங்கள் வியாதி
# எதுவாயிருந்தாலும் சரி

## தீர்த்துத்தருகிறேன்



அநேக டாக்டர்களால் தீராதென கைவிடப்பட்ட கொடிய ரோகங்களை எல்லாம் தீர்த்து, உலகமெங்கும் நல்ல புகழும் கீர்த்தியும் பெற்றவர். தீராத ரோகங்களை எல்லாம் தீர்க்கும் வல்லமை உடையவர். திமிர், குஷ்டம், மதமதப்பு, குழிப்புண், கிரந்தி, மேகப்பத்து, காசம், க்ஷயம், இருமல், இளைப்பு தீரும். மூப்பு வினால் செய்த மருந்துகள். பேப்பரைக் குறிப்பிட்டு வியாதி விபரம் தெளிவாய் எழுதவும்.

குறிப்பு:— இலங்கை, பர்மா, மலாய் நாட்டினர் முன் பணத்துடன் தங்கள் ஆர்டர்களை அனுப்பினால் இந்திய சர்க்கார் மருந்துகள் ஏற்றுமதி லைசென்ஸ் பெற்று உடனுக்குடன் மருந்தனுப்ப வசதி செய்கிறோம். மலாய் நாட்டிற்கு நமது மருந்துகள் அனுப்ப வசதி கிடைத்து விட்டது,

**வைத்தியசாலை கட்டிடம்**



வைத்திய ஆசிரியர்

# ஆர். எம். கே. வேலுச்சாமி.

சித்த வைத்தியசாலை, **பழனி**, PALANI. (S. I. R.)

Regd. No. M. 4829.